

# நாளொரு மேனியாய்

# சரும எழில் மேம்பாடு

# புதிய ரெக்ஸோனா துணையோடு



ரெக்ஸோனா சோப்பின் மிருதுவான நுரையில் அடங்கியுள்ளது கேடில்-எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த விசேஷத் தைலமான கேடில் சருமத்தினூடே சென்று. அதை மென்மையுடனும், மழமழப்பாகவும் மிளிரச் செய்து....உங்கள் மேனி வனப்பை ஓங்கச் செய்கிறது. எடுப்பான நறுமணத்தினால் உங்களை மணிக்கணக்கில் புது மலர்ச்சியுடனிருக்கச் செய்கிறது. உங்கள் அன்றாட அழகுசாதனத்துக்குகந்தது ரெக்ஸோனா.






புதிய மேலுறை, புதிய
வடிவழகு, புதிய பச்சை
வர்ணம் ஆகியவற்றோடு
கூடிய புதிய ரெக்ஸோனாவை
நீங்கள் விரும்புவீர்!

**புதிய ரெக்ஸோனா—**
**உங்கள் சருமத்திற்கு அனுகுணமானது**

# விழாக் காலந்தானே?

ஆம், ஸாதே பிஸ்கட்டுகளுக் கான நேரமும் அதுவேதான்!

SATHE'S
Carnival
ASSORTED
BISCUITS

புதிய ரகங்கள்—பைன் ஆப்பிள் க்ரீம், ராஸ்ப்பெர்ரி க்ரீம், சாக்கலேட் க்ரீம், ஆரஞ்சு க்ரீம்...இவற்றோடு பழைய பிரசித்தமான எல்லாவகைகளுடன் புதிய கண்ணைக் கவரும் டப்பா...நிறைந்திருந்தால் ஒப்பற்ற ருசி...காலியானாலும் சிறந்த உபயோகமான ஏனம்.



சாதே பிஸ்கட் & சாக்கலேட் கம்பெனி லிமிடெட் பூனா-2

# கல்கி

பிலவ, ஆனி 11 ❋ ஜூன் 25, 1961


## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 48

# காஸா சுப்பாராவின் மறைவு

ராஜாஜி

தைரியமும் தரும உணர்ச்சியும் மிகுந்த பத்திரிகையாளர் ஒருவரை நாடு இழந்து விட்டது. அநீதியையும் அக்கிரமத்தையும் வன்மையாகக் கண்டித்து எவரையும் எதிர்ப்பார் காஸா சுப்பாராவ். யாரைக் கண்டும், எதைக் கண்டும் பின்வாங்க மாட்டார். இவ்வளவு கடுமையாகப் போர் செய்யக் கூடியவருடைய உள்ளமோ குழந்தை உள்ளத்தின் மென்மை கொண்டது.

எந்தக் காரியத்திலும் 'அவனே சரண்' என்று கீதை வாக்கியத்தின்படி வாழ்க்கை முழுதும் நடத்தி, சென்ற வாரம் வெள்ளிக்கிழமை சூரியோதயத்துக்குமுன் தெய்வபதம் அடைந்து விட்டார்.

பல நாட்கள் நோய்வாய்ப்பட்ட உடலில் அடைபட்டிருந்த ஆன்மா விடுதலையடைந்து விட்டது. தர்ம வீர பராக்கிரமஞுக வாழ்க்கையை முடித்து விட்டு அனைவருக்கும் தம் அன்பைத் தந்து, அனைவரிடமும் அவர்களின் அன்பைப் பெற்றவராக மேலுலகம் சென்று விட்டார்.

அவர் பிரிவினுல் நாம் அடைந்த குறை பெரிதாயினும் அதை நாம் எண்ணுவதும் அதைப் பற்றிப் பேசுவதும் அவ்வளவு நல்லதல்ல. பயமின்றி எப்படி வாழ்வது, எப்படிப் பிறருக்கு உதவுவது, தம்மை எப்படி மறப்பது, பிறர் கஷ்டங்களைக் கண்டு எப்படி உருகுவது என்பதற்கெல்லாம் காஸா அவர்கள் தம் வாழ்க்கையை ஓர் எடுத்துக்காட்டாக நடத்தி முடித்து விட்டார்.

எனக்கு மனக் கலக்கம் உண்டான போதெல்லாம் தைரியம் தந்து வந்தார். அவருடைய பக்தியையும் அன்பையும் கண்ட மாத்திரத்தில் எனக்கு யௌவன சக்தி உண்டாகும். இத்தகைய பெருந்துணையை நான் இழந்தேன். அதைச் சொல்லிப் பயனில்லை.

# ஒரிஸ்ஸா தேர்தல் முடிவுகள்

ஒரிஸ்ஸா தேர்தலில் 35 சதவிகிதம் வாக்காளர்களே வாக்குப் பதிவு செய்திருக்கின்றனர் என்று இப்போது தெரிகிறது. வாக்காளர்களில் 100 க்கு 65 பேர் தேர்தலில் அசிரத்தையாக இருந்தால் அது என்ன ஜனநாயகம்?

ஒரிஸ்ஸாவில் காங்கிரஸ் வெற்றி பெற்று விட்டது என்று காங்கிரஸ் வட்டாரங்களில் மகிழ்ச்சி ஆரவாரம் பொங்கிப் பெருகி ஓடுகிறது. ஒரிஸ்ஸாவின் பழைய முதன் மந்திரி திரு விஸ்வநாத தாஸ் அவர்களும் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் திரு அழகேசன் அவர்களும், "பதவியை விட்டு வெளியே வந்து விட்டால் காங்கிரஸ் தோற்று விடும் என்று ராஜாஜி சொன்னது பொய்யாகி விட்டது. ஒரிஸ்ஸாவில் பதவியில்லாத போதும் மக்கள் காங்கிரஸையே தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். மக்களிடையே காங்கிரஸ் எவ்வளவு செல்வாக்குப் பெற்றிருக்கிறது என்பதற்கு இந்த ஒரிஸ்ஸா தேர்தல் முடிவே போதிய சான்றாகும்" என்று பேசியிருக்கிறார்கள்.

பதவியை விட்டு வெளியே வந்து போட்டியிடுவதே நியாயம் என்றுதான் ராஜாஜி சொன்னார். அதை யாரும் மறுக்க முடியாது.

'ஒரிஸ்ஸா தேர்தல்தான் காங்கிரஸின் செல்வாக்கை நிலைநாட்டி விட்டதே; இனிமேலாவது காங்கிரஸ் தைரியமாகப் பதவியை விட்டுவிலகி வந்து தேர்தலில் போட்டியிடுமா?' என்றுதான் கேட்டுப் பாருங்களேன்! ஒருநாளும் அப்படிச் செய்ய மாட்டார்கள்!

திரு விஸ்வநாத தாஸ் அவர்கள் நீண்டநாள் காங்கிரஸ்காரர் என்றாலும் அவரும் பாவம், இன்றைய காங்கிரஸுக்கு அடங்கி நடக்க வேண்டியவரே. அதைக் காண்பித்துக் கொள்வதற்காக மேற்கண்டவாறு அறிக்கை விட்டிருக்கிறார் என்றுதான் நாம் கொள்ள வேண்டும். அவருக்குத் தெரியும், ஒரிஸ்ஸாவில் காங்கிரஸின் சுயபலம் வெற்றி பெறவில்லை, காங்கிரஸின் பண பலம்தான் வெற்றி பெற்றது என்பது. இதைப் பல கட்சிக்காரர்களும் பத்திரிகைகள் வாயிலாகத் தைரியமாகச் சொல்லி வருகிறார்கள்.

இந்த இடைத்தேர்தலுக்காக நாற்பது லட்சம் ரூபாய் செலவழித்திருக்கிறதாம் ஒரிஸ்ஸா காங்கிரஸ். 200 ஜீப்கள் பறந்தனவாம். 10,000 பணம்பெற்ற தொண்டர்கள் வேலை செய்தார்களாம். அதாவது காங்கிரஸ் சராசரியில் ஓர் அபேட்சகருக்கு இருபத்தெட்டாயிரம் ரூபாய் விதம் செலவழித்திருக்கிறது. தேர்தலுக்கு நிற்கும் அபேட்சகர் ஒருவர் செலவிட அனுமதிக்கப்பட்ட தொகையை விட நான்கு மடங்கு அதிகமாகக் கட்சியின்பேரில் செலவழிக்கப்பட்டிருக்கிறது.

இப்படி அபரிமிதமாகப் பணத்தை வாரி இறைத்துத்தான் காங்கிரஸ் ஒரிஸ்ஸாவில் வெற்றி பெற்றிருக்கிறது. இதை யாராவது மறுக்க முடியுமா?

# விஞ்ஞான மேதையின் பிரிவு

டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களின் அகால மரணம் நாட்டில் எல்லோருக்கும் துயரத்தை விளைவித்துள்ளது. பௌதிக விஞ்ஞானத்தில் டாக்டர் ஸி. வி. ராமன் அவர்களுடன் முன்னாட்களில் அவர் நிகழ்த்திய பரிசோதனைகளும் பின்னர் தனியாக நடத்திய ஆராய்ச்சிகளும், நம் நாட்டில் மட்டுமின்றி, மேல் நாடுகளிலும் அவருடைய புகழை நிலைநாட்டிவிட்டன. கௌரவங்களும், விருதுகளும், புகழும் அவரைத் தேடி வந்தடைந்தன. எப். ஆர். எஸ். என்கிற ஆங்கில விஞ்ஞான கொடுமுடி விருது அவருக்குத் தரப்பட்டது. இந்திய விஞ்ஞானிகளின் முதல் வரிசையில் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணனுக்கு ஸ்தானம் உண்டு.



1947ம் ஆண்டு தேசிய பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம் நிறுவப்பட்டதிலிருந்து அதன் தலைவராக இருந்து அவர் ஆற்றிய பணி அளவிட முடியாது. விஞ்ஞான

சம்பந்தமான பல சர்வ தேசக் குழுக்களில் அவர் அங்கம் வகித்தார். 1954ல் அவருக்குப் பத்மபூஷண் விருது அளிக்கப்பட்டது.

டாக்டர் கிருஷ்ணன் எளிய தோற்றமுள்ளவர். எவரும் எளிதில் அவரை அணுகிப் பேசலாம். தோற்றத்தில் காணுவது போலவே குணத்திலும் எளிமை மிகுந்தவர். தங்கமான உள்ளம் படைத்தவர். குழந்தை போன்ற சுபாவம் உள்ளவர்.

முதிர்ந்த விஞ்ஞானிகளுக்கு சுபாவமாக ஏற்படும் உயர்பண்பும், வினயமும், தத்துவ சிந்தனையும், தெய்வ பக்தியும், திரு கிருஷ்ணன் அவர்களிடம் பூரணமாகப் பொலிவு பெற்றிருந்தன. மனிதத் தன்மையும் சரள சுபாவமும் படைத்தவர் அவர். டாக்டர் கிருஷ்ணன் வெறும் விஞ்ஞானி மட்டுமல்ல; வைஷ்ணவ கிரந்தங்களில் அவருக்கிருந்த அறிவும் பக்தியும் பண்டிதர்களும் வியந்து போற்றும்படி யிருந்தன. வடமொழியிலும் தமிழிலும் அவருக்கிருந்த புலமை சிறப்பு வாய்ந்தது. ஒரு மாதத்துக்கு முன்பு சென்னைமா நகரில் கம்பர் ஆராய்ச்சிக் கூட்டத்தில் அவர் நிகழ்த்திய உரையை ஓர் அரிய இலக்கிய விருந்து என்றே சொல்லலாம். தென்னிந்தியர்கள் மிகுதியாக உள்ள வடநாட்டு நகரங்களில், குறிப்பாகக் கல்கத்தா, புதுதில்லி நகரங்களில், தமிழைப் பரப்பியதில் டாக்டர் கிருஷ்ணனின் பணி உயர்தரமானது.

பழமை, புதுமை இரண்டையும் சீராக இணைத்துப் பாரதப் பண்புக்கு இலக்கணம்போல் வாழ்ந்த அவருடைய வாழ்வு நமக்கு ஓர் எடுத்துக்காட்டு. உடல் நலிவுற்றிருந்தபோது வைத்திய நிபுணர்கள் அவர் பூரண ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தியும் கூட அவர் அதனைப் பொருட்படுத்தாது ஆராய்ச்சிகளில் தீவிரமாக ஈடுபட்டுத் தம் இன்னுயிரையும் விஞ்ஞானத்துக்கே அர்ப்பணித்து விட்டார். அன்னாரின் மறைவு சாதாரணமானதொரு சோக சம்பவம் மட்டும் அல்ல; ராஜாஜி கூறியுள்ளது போல், தமிழுக்கும் விஞ்ஞானத்துக்கும் ஈடு செய்ய முடியாத பெரும் நஷ்டமும் ஆகும்.

அவருடைய குடும்பத்தினருக்குக் கல்கியின் லட்சக்கணக்கான வாசகர்களின் சார்பாக ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# எட்டிக்குப்போட்டி!

"எலிப் போருக்குச் செல்லும் பூனைகளுக்குப் பால் விருந்து."
—டோகியோ செய்தி

இந்தப் பூனையும் பாலைக்குடிக்குமா என்பதுபோல் அவை சும்மா இருந்திருக்காது!

"மந்திரி சி. சு. வீட்டில் தமிழகக் காங்கிரஸ் தலைவர்கள் ரகசிய ஆலோசனை."

சி. சு. வீட்டிலே 'குசு குசு' வென்று ரகசியம் பேசியிருப்பார்கள்.

"ரூபாய் பன்னிரண்டாயிரத்தைத் திருப்பிக் கொடு."
—சிற்றரசு சம்பத்தைக் கேட்கிறார்

ராஜேந்திரனையே லட்சியம் செய்யாத நான் ஒரு சிற்றரசுக்கா பணிவேன்? என்று சம்பத் திரும்பக் கேட்கலாம்.

"ஈ ஒழிப்பு வாரம் கொண்டாடத் தமிழக அரசு ஆணை." —குட்டித் தகவல்

கொண்டாட்டம் ஈக்களுக்கு அல்ல என்பது நிச்சயம்!

"திரைப்படக் கலைஞர்கள் என் கட்சியில் சேரலாம். ஆனால் அவர்கள் கட்சியை ஆட்டி வைக்க முடியாது!"
—சம்பத் சூடு

எங்களை ஆட்டிவைக்க வேண்டிய டைரக்டர்களையே நாங்கள் ஆட்டிவைப்பதை மறந்து விட்டுப் பேசுகிறாரா என்று கேட்கிறார் முன்னணி நடிகர் ஒருவர்.

"விலைவாசியைக் குறைப்பது எப்படி?" பதினோராந் தேதி காங்கிரஸ் கமிட்டி ஆலோசனை.

பேச்சைக் குறைத்து காரியத்தைக் கவனிப்பார்களா?

பள்ளிகளில் வகுப்புகளை ஸ்டாண்டர்டுகளாக மாற்றியிருப்பதால் வாதப் பிரதிவாதங்கள் ஏற்பட்டுள்ளன. —செய்தி

வகுப்புவாதத்தைக் காங்கிரஸ் சர்க்கார்தான் கிளப்பி விடுகிறதென்பதற்கு மேலுமொரு சான்று!

"டெலிவிஷன் மூலம் மாணவர்களுக்குப் போதனை."
—ஒரு தலைப்பு

இடைவேளையில் இலவசப் பகல் உணவு அளிக்கப்படுமா, அல்லது அதையும் டெலிவிஷனிலேயே காட்டி விடுவார்களா?

# ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்

...உலகம் முழுவதும்

தாய்மார்களால் நம்பப்பட்டது!






## குழந்தையின் இளம் சருமத்திற்கு இதத்தையும் பாதுகாப்பையும், வனப்பையும் அளிக்கிறது

நேர்த்தியாக வாசனையிடப்பட்ட ஜான்ஸன்ஸ் பேபி லோஷனில் சருமத்திற்கு அழகூட்டும் எண்ணெய்கள், இதமளிக்கும் லனோலின் மற்றும் ஆன்டிஸெப்டிக் குணமுள்ள பிதியோருல் இம்மூன்றும் சிறந்த வகையில் சேர்க்கப்பட்டுள்ளன... இக்கலவை குழந்தைகளுக்கு சுகத்தை அளிப்பதற்காகவே விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்டது. ஜட்டி உராயும் பாகங்களுக்கு இது பிரத்தியேகமாக இதமளிக்கிறது. ஜட்டி உராய்வதால் ஏற்படும் சிராய்ப்பு வராமல் தடுத்து, சருமத்தில் தொத்துநோய்கள் பரவாமல் பாதுகாத்து, குழந்தையின் இளம் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும் வைக்கிறது.

குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் ஆங்கிலம் அல்லது ஹிந்தி பிரதியைப் பெறுவதற்கு உங்கள் பெயர் மற்றும் விலாசத்துடன் 25 ந. பைசா தபால் வில்லைகளையும் சேர்த்து தபால் பெட்டி 6531, டிபார்ட்மெண்ட் நெ. 44, பம்பாய் என்ற விலாசத்துக்கு அனுப்புங்கள்.

குழந்தைகளின் பரிபூர்ண பராமரிப்பிற்கு

**ஜான்ஸன்ஸ்** தயாரிப்புகள்

JWT-JJ 2019



# மாமியார்-1961



இத்தாலி தேசத்து மாட்டுப் பெண்களும் மாப் பிள்ளைகளும் ஒன்றுகூடி 1961-ம் வருஷத்திய சிறந்த இத்தாலிய மாமியாரைத் தேர்ந்தெடுத்து, அவருக்கு ஜூலை 16உ அன்று தங்கத்தில் அப்பளாக் குழவி பரிசளிக்கத் திட்டமிட்டிருப்பதாக ஜூன் 2உ வெளியான ஒரு செய்தியை யொட்டி 'சபாஷ் செய்தி' நிருபர் கற்பனை ஏடு பத்திரிகைக்கு விஷய தானம் செய்கிறார்:

**சென்னை, ஜூன் 3உ**

இத்தாலி தேசத்திலுள்ள அந்த ஊரின் பெயரை உச்சரித்தாலே பல் உடைந்து விடும் என்றாலும் பல் வலி உள்ளோரின் நலனை உத்தேசித்து எழுதுகிறேன். 'ப்ரோகெட்டோ லாண்டோ ஸ்பிரிட்டோ' என்ற அந்த ஊரில் ஜூலை 16உ பரிசளிப்பு விழா நடைபெறப் போவதை அறிந்ததும் சென்னை குயிலாப்பூர் லேடீஸ் கிளப்பில் பெரிய ரகளை ஏற்பட்டது. கிளப் அங்கத்தினர்களை அவசர அலுவல் ஒன்றினை விவாதிக்கவென்று அழைத்த 'பிரஸி டெண்டு' மிஸஸ் கனகாம்பரபுஷ்பம் காரசாரமாகத் தமது பேச்சை ஆரம்பித்துக் குழுமி யிருந்தோரைத் திகைக்க வைத்தார். "மாமி யார் குலத்துக்கே இழுக்கு நேர்ந்துவிட்டது!" என்று தொடங்கிய அவர் தொடர்ந்து கூறியதாவது:

"மாமியார்கள்தான் மாட்டுப்பெண்களுக்கு நற்சான்று அளிக்க வேண்டுமே யொழிய மாப்பிள்ளைகளும் மாட்டுப் பெண்களும் மாமியார்களைத் தட்டிக் கொடுப்பதென்பது இதுவரை கேட்டறியாத அக்கிரமம். என் மாட்டுப்பெண் என்னை அப்படித் தட்டிக் கொடுத்தால் அவள் தட்டின இடத்தை உடனே கழுவிக் கொண்டு விடுவேன்! (கரகோஷம்.)

"இந்தச் சிறுசுகள் ஏதோ அழகுப் போட்டி என்னும் அவலட்சணப் போட்டியில் இது காறும் ஈடுபட்டு வந்தனர். போனால் போகட்டும் என்று பார்த்தால் இப்போது மாமியார்கள் தலையிலேயே கையை வைக்க வந்து விட்டார்கள்! (சிரிப்பு)

"மாமியார் குலத்தை அவமானப்படுத்தவே இந்தப் போக்கிரித்தனமான போட்டி நடைபெறுகிறது! மாமியார்த் தோழிகளே! பொறுத்தது போதும், பொங்கி எழுங்கள்!" (பலத்த கரகோஷம்.)

இதைத் தொடர்ந்து மாமியார்களுக்கும் மாட்டுப் பெண்களுக்கும் இடையே சச்சரவு மூண்டு கூட்டம் ஒரே களேபரத்தில் முடிந்தது.



**சென்னை, ஜூன் 4உ** குயிலாப்பூர் லேடீஸ் கிளப்பில் அங்கத்தினர்களாய் இருந்து வந்த மாமியார்கள் தனியே பிரிந்துபோய் மாமியார்கள் சங்கம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். விரைவில் அகில இந்திய மாமியார்கள் மகாநாடு கூட்டப் போவதாகச் சங்கத் தலைவி ஸ்ரீமதி கனகாம்பரபுஷ்பம் நமது சபாஷ் செய்தி நிருபரிடம் தெரிவித்தார்.

**சென்னை, ஜூன் 5உ** அகில இந்திய மாமியார்கள் மகாநாட்டுக்கான ஏற்பாடுகள் துரிதமாக நடைபெறுகின்றன. ஜூன் 15உ நடைபெறவிருக்கும் இந்த மகாநாட்டில் இந்தியாவின் "ஸ்ரீமதி மாமியார்" மாமியார் களாலேயே தேர்ந்தெடுக்கப்படுவார். மாமியார் சங்கமும் பாரதநாடு முழுதுமுள்ள அதன் கிளைகளும் மாமியார்கள் நலனுக்காக இடைவிடாமல் பாடுபடும் என்று மாமியார் சங்கக் காரியதரிசி பங்கஜம்மாள் ஒரு கற்பனைக் கையில் தெரிவிக்கிறார்.

**சென்னை, ஜூன் 7உ** இம்மாதம் 15ந் தேதி நடைபெறவிருக்கும் "ஸ்ரீமதி மாமியார்" போட்டியில் கலந்து கொள்ள விரும்பும் மாமியார்கள் கீழ்க்காணும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

1. குறைந்தபட்ச வயது: நாற்பத்தைந்து.
2. „ எடை: நூற்றுத்தொண்ணூறு
3. „ மாப்பிள்ளைகள்: ஒன்று
4. „ மாட்டுப்பெண்கள்: இரண்டு

இதைத் தவிர பின்வரும் சர்ட்டிபிகேட்டுகளையும் சமர்ப்பிக்க வேண்டும்.

1. பிள்ளையிடமிருந்து: மாட்டுப்பெண்ணை ஒரு முறையாவது கைநீட்டி அடித்ததாக.

2. சம்பந்தியிடமிருந்து: தொந்தரவு பொறுக்க முடியாமல் தலை தீபாவளிக்குப் பத்து பவுன் சங்கிலி பெண்ணுக்குச் செய்து போட்டதாக.

3. மாட்டுப் பெண்ணிடமிருந்து: தினம் அரைமணி நேரமாவது மாமியாரின் கால்களைப் பிடித்து விடுவதாக.

மேற்சொன்ன நிபந்தனைகளைப் பூர்த்தி செய்வோருக்குக் கீழ்க்காணும் பரீட்சைகள் நடத்தப்படும்.

1. வாய் ஓயாது ஒரு மணி நேரம் அக்கப் போர் செய்யும் ஆற்றல்.

2. நாட்டியம் சங்கீதம் ஆகியவை பற்றி ஒன்றும் தெரியாவிட்டாலும் குறை கூறும் திறமை.

3. ஒரு மணி நேரத்தில் இடக்கூடிய அதிக பட்ச அப்பளாங்கள்.



**சென்னை, ஜூன் 15ல்.** மாமியார்கள் மகாநாட்டுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீமதி கனகாம்பரபுரம், "மருமகளும் வருங்காலத்தில் ஒரு வீட்டு மாமியாரே என்பதைப் பாரதநாட்டு மாமியார்கள் ஒருபோதும் மறந்ததில்லை. அந்த வருங்கால மாமியார்களுக்கு இப்போது முதற் கொண்டே நாம் சிறந்த பயிற்சி அளித்து வருகிறோம். நம்மைப் போலவே பிற்காலத்தில் அவர்களும் மாட்டுப்பெண்களிடம் நடந்து கொள்வார்களாக!" என்றார்.

இதன் பிறகு ஸ்ரீமதி மாமியார் போட்டி நடைபெற்றது. ஸ்ரீமதி கோமதி அம்மாளும் ஸ்ரீமதி கனகாம்பரபுரமும் எல்லாப் போட்டிகளிலும் சரிநிகராக விளங்கவே இறுதியாக அவ்விருவருக்கும் இடையில் அப்பளக் குழவி யுத்தம் நடைபெற்றது. இதில் ஸ்ரீமதி கனகாம்பரபுரமே வெற்றி பெற்றார்.

பலத்த ஆரவார கரகோஷத்துக்கிடையில் ஸ்ரீமதி கனகாம்பரபுரமே "ஸ்ரீமதி மாமியார்" என அறிவிக்கப்பட்டது.

இதே மகாநாட்டில் மாமியார்கள் நல்லெண்ணத் தூது கோஷ்டி ஒன்றினை அயல் நாடுகளுக்கு அனுப்புவது பற்றி அரசாங்கம் யோசிக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**புதுதில்லி ஜூன் 17ல்.** பார்லிமெண்டு அங்கத்தினர் மிஸஸ் ஸுஜாதா ஸுல்தானி இன்று கலாசார மந்திரியைப் பேட்டி கண்டு திரும்பிய பிறகு நமது நிருபரிடம் கூறியதாவது: "மாமியார்கள் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் மந்திரியின் கவனத்துக்கு வந்ததா என்று கேட்டேன். யோசித்துச் சீக்கிரமே ஒரு முடிவுக்கு வருவதாக மந்திரி தெரிவித்திருக்கிறார்."

**புது தில்லி ஜூலை 1ல்.** 'ப்ரோகெட்டோ லாண்டோ ஸ்பிரிட்டோ'வில் நடைபெறப் போகும் மாமியார் தேர்தலில் பார்வையாளராகக் கலந்துகொள்ளப் பாரத நாட்டிலிருந்து ஒரு நல்லெண்ணத் தூதுகோஷ்டிசெல்கிறது. இந்தியாவின் "ஸ்ரீமதி மாமியா"ராக விளங்கும் ஸ்ரீமதி கனகாம்பரபுரம் இந்தத் தூதுகோஷ்டிக்குத் தலைமை தாங்குவார்.

**இத்தாலி ஜூலை 16ல்.** 'மாமியார் 1961' ஆக ஒருவரைத் தேர்ந்தெடுக்கக்கூடிய இத்தாலியர்கள் இந்திய மாதர்களின் வரைக் கண்டு திகைத்து நின்றனர். காரணம் அவர்கள் ஒவ்வொருவரும் கோஷங்கள் எழுதப்பட்ட அட்டைகளைத் தலைக்குமேல் தாங்கி நின்றதுதான். அந்த அட்டைகளில் "பின்னை - மருமகள் ரகசிய ஒப்பந்தம் ஒழிக!" "மாட்டுப் பெண் சர்வாதிகாரம் அடியோடு ஒழிக!" "மாமியார்களே உங்களுக்கு மானமில்லையா?" என்பது போன்ற கோஷங்கள் கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தன. இத்தாலிய மாமியார்கள் இதனால் ஆவேசம் கொண்டு மாட்டுப் பெண்களும் மாப்பிள்ளைகளும் நடத்தும் போட்டியில் கலந்து கொள்ள மறுத்தார்கள். இத்தாலியில் இன்று முதல் மாமியார் – நாட்டுப் பெண் நல்லுறவு முற்றிலும் முறிந்து விடும் என்று தெரிகிறது.

**புதுதில்லி ஜூலை 18ல்.** "மாமியார்–மருமகள் நல்லுறவுக்கு எதிரியான ஸ்ரீமதி கனகாம்பரபுரத்தை இத்தாலிக்கு அனுப்பி வைத்ததற்குப் பொறுப்பாளி யார்?" என்று கேட்டார் திரு குமரேசன் எம். பி. "இந்தப் பரிதாப நிலைக்குக் காரணம் யாராயிருந்தாலும் அவர் தைரியமாக முன்வந்து தமது மந்திரி பதவியை ராஜிநாமா செய்யட்டும் என்று சவால் விடுகிறேன்!" என்றாரவர்.

**புதுதில்லி ஜூலை 19ல்.** கலாசார மந்திரி இன்று இத்தாலி கலவரங்கள் பற்றிக் குறிப்பிடுகையில் ஸ்ரீமதி கனகா என்னும் ஒருவருக்கும் ஸ்ரீமதி கனகாம்பரபுரம் என்பவருக்கும் இடையே தமது காரியாலயச் சிப்பந்திகள் குழப்பிக்கொண்டு தவறுதலாகப் பின்னவருக்கு அழைப்பு அனுப்பி விட்டதாக ஒப்புக் கொண்டார். இந்தத் தவற்றுக்காகத் தாம் மனப்பூர்வமாக வருந்துவதாகவும் இதனால் இத்தாலி – இந்திய நல்லுறவு பாதிக்கப் படாது என்று நம்புவதாகவும் சொன்னார். மேற்கொண்டு என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்று ஒரு நிருபர் கேட்டதற்கு ஸ்ரீமதி கனகாம்பரபுரத்தை உடனடியாக இங்கே திருப்பி அனுப்பத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யுமாறு இத்தாலியில் உள்ள நமது ஸ்தானிகராலயத்தைக் கேட்டுக் கொண்டுள்ளோம் என்று மந்திரி பதிலளித்தார்.

**இத்தாலி ஜூலை 21ல்.** ஸ்ரீமதி கனகாம்பரபுரம் தாய்நாடு திரும்புகிறார் என்று அறிந்ததும் இத்தாலியர்கள் திரளாக விமான நிலையத்துக்கு வழியனுப்பி வைக்க வந்திருந்தார்கள். ஸ்ரீமதி கனகாம்பரபுரம் தமக்குத் தோள் கொடுத்துக் கொண்டு வேதனையளிப்பதையும் பொருட்படுத்தாமல் அனைவரிடமும் கைகுலுக்கி விடைபெற்றுக் கொண்டார்.

உப்பு சப்பில்லாத இத்தாலியருடைய வாழ்க்கையில் மாமியார்–மருமகள் நல்லுறவை முறித்ததன் மூலம் சுவாரஸ்யம் உண்டாகச் செய்த ஸ்ரீமதி கனகாம்பரபுரத்தை இத்தாலியர் என்றென்றும் நன்றியுடன் நினைவு கூறுவார்களென்றார் இத்தாலிய கலாச்சார மந்திரி.

**புது தில்லி, ஆகஸ்டு 15ல்.** இத்தாலிய இந்திய நல்லுறவுக்குப் பெரிதும் பாடுபட்ட ஸ்ரீமதி கனகாம்பரபுரத்துக்கு இவ்வருஷம் பாரதஸ்ரீ பட்டம் கிடைக்கும். சில நாட்களுக்கு முன்னால் இத்தாலிக்குச்சென்ற மாமியார்கள் நல்லெண்ணத் தூதுகோஷ்டிக்கு ஸ்ரீமதி கனகாம்பரபுரம் தலைமை தாங்கியது நினைவிருக்கலாம். — **குட்டி கிருஷ்ணன்**



# நாவல் பிறக்கிறது..

ஓர் எழுத்தாளனை முதன் முதலாக நாவல் எழுதத் தூண்டிய காரணங்களை விளக்குவது இந்தக் கட்டுரையின் நோக்கம் அல்ல. அவ்வனுபவங்கள் மற்றொரு தொடருக்கும் இடம் கொடுக்கலாம். இந்தக் கட்டுரையைப் பற்றிய வரையில் ''அவரவர்களுடைய உயர்ந்த நாவல் பிறந்த காரணமே'' தேவையானது. இவ்விஷயத்திலும் கூட நாவலை எழுதிய ஆசிரியருக்கும் வாசகர்களுக்கும் அபிப்பிராய பேதம் இருக்கலாம். ஆனால் என்னுடைய ''மண்ணாசை''யைப் படித்த கணக்கற்ற வாசகர்களும் பல அறிஞர்களும்கூட என் அபிப்பிராயத்தை ஆமோதித்திருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. இவ்வறிஞர்களில், உலக மேதையும் நோபல் பரிசும் பெற்றவருமான காலஞ்சென்ற வில்லியம் பட்லர் யேட்ஸ் அவர்களும் ஒருவர். மேல்நாட்டாருக்கு மகாகவி டாகூரையும் அவரது ''கீதாஞ்சலி''யையும் அவர் அறிமுகப்படுத்தியவர் என்பது வாசகர்களில் பலருக்குத் தெரிந்திருக்கலாம். ஆகவே எனக்கு ''மண்ணாசை'' பிறந்த கதையைக் கூறுகிறேன்.

சங்கரராம்

நான் சின்னஞ் சிறுவனாக, மாணவனாகத் திருச்சியில் இருந்தபொழுதே ''ஹோட்டலில்'' சாப்பிடும் விதி எனக்கு ஏற்பட்டு விட்டது. படிப்பதற்கும் ஒரு வீட்டின் தெருத்திண்ணையை ஒட்டியிருந்த அறை ஒன்று எனக்கு அமர்த்தப்பட்டிருந்தது. அதை அறை என்று சொல்வதும் சரியாகாது. அது எட்டடி நீளம் ஆறடி அகலம்தான் இருந்தது. காற்று தப்பித் தவறிக்கூட உள்ளே நுழைவதற்கு வழி கிடையாது. அறையின் ஒருபுறம் பலகைகளால் அடைத்து மூடப்பட்டிருந்தது. இந்த அடைப்புக்குப் பின், பயிர்த்தொழில் செய்து பிழைத்து வந்த விவசாயக் குடும்பம் ஒன்று அங்கே தாற்காலிகமாக வசிப்பதற்கு வந்திருந்தது. அவ்வீட்டின் சொந்தக்காரர் பணம் பறிப்பதில் கைதேர்ந்தவர். அவரிடம் வீட்டோடு பல மாடுகளும் இருந்தன. மாடுகளோடு மாடுகளாய் மனிதர்களும் வசிப்பதற்கு இடைஇடையே ஓடு போட்டு மூடப்பட்ட ''பங்கு''கள் இருந்தன என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும். என் அறையும் அம்மாதிரி ஒன்றுதான் என்றாலும் அது தெருப்பக்கம் இருந்தது நான் செய்த பெரிய பாக்கியம்தான்.

எனக்குப் பின்புறம் வசித்துவந்த விவசாயக் குடும்பத்தார் பேசுவதெல்லாம் என் காதில் விழாமல் போகாது. சில வேளைகளில் மிகவும் உபத்திரவமாகக் கூட இருக்கும். என் காதில் விழுந்த விஷயங்களிலிருந்து ஒன்று மாத்திரம் எனக்கு நன்றாக விளங்கியது: அந்த விவசாயக் குடும்பம் மிகவும் நொந்து போயிருந்தது என்பதுதான் அது.

திருச்சிக்குச் சிறிது தூரத்துக்கு அப்பாலிருந்த கிராமத்தில் அவர்களுக்கு ஏறக்குறைய இரண்டு ஏக்கரா நஞ்சை நிலம் இருந்தது. ஆனால் அது முதல் தரமான பூமி. அவர்களுடைய சம்பாஷணையிலிருந்து அதன் மேல் அவர்கள் வைத்திருந்த ஆசை - பாசம் என்றும் கூறலாம் - என்னை வியக்கச் செய்தது. குடும்பத்தின் தலைவியான கிழவிக்கு வயது அறுபதுக்கு மேல் இருக்கும். அவளுக்கு இரண்டு புதல்வர்கள். மூத்தவனுக்குத் திருமணம் ஆகியிருந்தது. ஆனால் அவனுக்கு எழுத்து வாசனையே கிடையாது. கிராமத்தாருக்கு உள்ள கபடமற்ற முரட்டுக் குணம் மட்டும் உண்டு. இளையவனும் இரண்டு மூன்று வகுப்பு படித்தவன். ஆனாலும் அண்ணன் சொல் அவனுக்கு வேத வாக்கு. பாதி அறிவீனத்தாலும், பாதி மோசம் செய்யப்பட்டதாலும், அவர்கள் தங்களுடைய நிலத்தைச் சுவாதீன அடமானத்துக்கு வைத்துவிட்டு திருச்சிப் பட்டணத்தில் பணம் சம்பாதித்து, நிலத்தை மீட்டுக் கொள்ள வந்தவர்கள். இந்த நிலைமையில், ஒரு துன்மார்க்கன்,



**நாவல் பிறக்கிறது!**

அடுத்த இதழில்

**ஆர்வி**

தமது அநுபவங்களை எழுதுகிறார்!

கொடுத்த பணத்தைத் திரும்பி வாங்கிக் கொண்டும், அந்த அப்பாவிகளிடம் அவன்கையொப்ப மிட்ட வீட்டைக் கொடுக்காமல், வழக்குவேறுதொடர்ந்து, நிலத்தை ஜப்தி செய்ய வந்து விட்டான். அன்றிரவு அக்குடும்பம் தவித்த தவிப்பை என்னால் பொறுக்க முடியவில்லை. படிப்புவாசனையே இல்லாததால் அனாவசியமாக ஏன் இவ்வளவு கஷ்டப்பட வேண்டுமென்றும் வருந்தினேன். ஆனால் நான் செய்யக்கூடியதாக ஒன்றும் இல்லை. மறுநாள் சகோதரர்கள் இருவரும் இருட்டோடு, ஏழெட்டு மைல்களுக்கு அப்பால் இருந்த தங்கள் வயலுக்கு ஓடினார்கள்; கோர்ட்டு சிப்பந்திகளை நிலத்தை மிதிக்காமல் தடுத்தார்கள்; மோசம் செய்தவனோடு கை கலந்தார்கள். அந்த மகானுபாவனுடைய ஆட்களால் மூத்தவனுக்கு மண்டை உடைந்தது; இளையவனுக்குக் கை ஒடிந்தது. அவர்கள் இருவரும் இரண்டு மாதங்கள் ஆஸ்பத்திரியில் கிடந்தார்கள். அதற்குள் மூத்தவன் மனைவி இறந்து போனாள். கிழவிக்குப் பைத்தியம் பிடித்தது. ஆலயங்களைச் சுற்றித் திரிந்தாள்.

மூத்த மகன் கண்காணாத சீமைக்கு ஓடிப் போய் அங்கே இறந்து விட்டதாகப் பேசிக் கொண்டார்கள். மண்ணாசையின் வேகமும், கிராம வாழ்க்கையின் அவலங்களும், சூழல்களும் என் இளம் மனத்தில் பச்சை மரத்தில் ஆணி அடித்தாற்போல் புதைந்து விட்டன. பிறகு படிப்பை முடித்துக் கொண்டு நான் சென்னைக்கு வந்தேன்.

இங்கும் ஓர் அநீதியின் கொடுமை என்னைத் திகைக்கச் செய்தது. இதை விஸ்தரிக்கும் இடம் இது அல்ல. எனக்கு முதலிலிருந்தே நானும் ஒரு கதாசிரியனாக விளங்க வேண்டுமென்று இருந்த அவா, இப்பொழுது அதை பிழைப்புக்கும் ஒரு வழியாக ஏன் தேடிக் கொள்ளக் கூடாதென்ற எண்ணத்தை உதிக்கச் செய்தது. சீக்கிரமாகவே "பார்வதி" என்ற நாவலை எழுதினேன். அதற்கு வாசகர்களிடையே நல்ல வரவேற்பு கிடைத்தது. இந்த வெற்றியே, 'ஏன் நானும் அழியாத ஓர் இலக்கியத்தைப் படைக்கக் கூடாது' என்ற ஆசையைத் தூண்டியது. இது அசட்டுக் கர்வமாயும் இருக்கலாம். ஆனால் இளமையின் உற்சாகத்துக்குக் கரை ஏது? பிள்ளைப் பருவத்தில் மனத்தில் புதைந்து கிடந்த மண்ணாசையின் கூத்து தன்னைப் பயன்படுத்திக் கொள்ளும்படி என்னை வற்புறுத்தியது. உடனே "மண்ணாசை" என்ற நாவலும் பிறந்தது.

அட்டைப்பட விளக்கம்

## " பிள்ளைப் பிராயத்திலே....

'ஏது சத்தியம், எது அசத்தியம் என்று சந்தேகம் வந்தால் மகாகவிகளின் வாக்கைப் பார், அவர்கள் சொல்வதுதான் சத்தியம்' என்பார்கள். நம்முடைய அட்டைப் படத்தில் காணும் இந்த வாண்டுப்பயலோ மகாகவி ஷேக்ஸ்பியரின் வாக்கையே பொய்யாக்கி விடுகிறான்! தோளில் பையை மாட்டிக்கொண்டு, வேண்டா வெறுப்பாக, நத்தையைப்போல் பள்ளிக்குச் செல்லும் பையனைப் பற்றித்தான் அவர் பாடினார். இவனோ பக்கத்திலேயே பள்ளி இருந்தும் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் ஆனந்தமாய்ப் பலூன் ஊதிக்கொண்டிருக்கிறான். குவித்த முகத்திலும், மூடிய கண்களிலும் அந்த ஆனந்தம் வெளியாகாவிட்டாலும் அவனது இதயம் என்னவோ அந்தப் பலூனைவிடப் பெரிதாகப் பூரித்துப் போகிறதென்பதில் சந்தேகமேயில்லை.

இருந்தாலும் அவன் கண்ணைத் திறந்து கொண்டால்தானே அது இன்னும் எவ்வளவு பருக்கமுடியும் என்று தெரிந்து கொள்ளமுடியும்? இப்படியே போனால் அது வெடித்துவிடாதோ? இந்தப் பயம்தான் அவன் தங்கைக்கு. பயமா, இல்லை, ஆவலா? இரண்டுமா? ஒன்றுமட்டும் நிச்சயம். பலூனின் வெடிச் சத்தத்துக்குப் பயந்தல்ல அவள் தன் காதைப் பொத்திக் கொண்டிருப்பது. தன் கரிய பெரிய விழிகளை மலர்த்தக் கிடைத்திருக்கும் இந்த வாய்ப்பை நழுவவிடுவதா என்றுதான் அவள் அபிநயிக்கிறாள். நம் ஓவியர் வினுவும் அகலத் திறந்த இவ்விரு விழிகளை மட்டுமின்றி இறுகமூடிய அந்தப் பாலனின் விழிகளைக்கூடப் பேசவும் செய்து நம்மை இரண்டு இளம் உள்ளங்களோடு உறவு கொண்டாட வைத்துவிடுகிறார். விடுமுறையில் குழந்தைகள் செய்யும் விஷமத்தைப் பொறுக்கமாட்டாமல் பள்ளிக்குப் போகமாட்டார்களா என்று ஏங்கும் நாம், பள்ளிக்கு அவர்கள் சென்ற பிறகு தானே அந்த உறவின் அருமையை உணர்கிறோம்?



மனிதனுக்குக் கொஞ்சம் பணம் வந்தவுடனே ஒரு கார் வாங்க ஆசைப்படுகிறான். கார் வாங்கியவுடன் இன்னும் கொஞ்சம் பணம் சம்பாதிக்க ஆசை வருகிறது! அடிக்கடி பெட்ரோல் போட....

❁



பயில்வான்: இந்தத் தேகப் பயிற்சியெல்லாம் நீங்க ஜன்னல் கதவுகளைத் திறந்து வைச்சுக்கிட்டுத்தான் செய்யணும்!

வந்தவர்: என்னப்பா இது! என் வீட்டு ஜன்னல் கதவுகளைத் திறக்கிறதுக்குத் தானே தேகப் பயிற்சியே செய்யப் போறேன் நான்!

❁

"குளவி கொட்டி விட்டதம்மா!"

"அடாடா! அது மேலே சுண்ணாம்பு தடவு."

"டேய்! என்னடா பண்ணுகிறே!"

"குளவியைப் பிடித்துக் கொண்டிருக்கிறேன், அம்மா!"

"எதுக்கடா?"

"நீதான் அதன் மேல் சுண்ணாம்பு தடவச் சொன்னாயே!"

❁



"எதையுமே என் மனைவி காதில் போட்டுக் கொள்ள மாட்டேன் என்கிறாள்!"

"ஒரு ஜோடி வைரக் கம்மல் வாங்கிக் கொடுத்துப் பார்! போட்டுக் கொள்ளா விட்டால் என்னைக் கேளு!"

❁

"எவ்வளவு ஞாபக சக்தியுள்ள மனிதனையும் மறதியுள்ளவனாகச் சுலபமாக உண்டாக்க முடியும்!"

"அதெப்படி ஐயா, முடியும்? அது வீண் பேச்சு."

"முடியாதா? அவனிடம் கொஞ்சம் பணம் கடன் கொடுத்துப் பாருங்கள்."

❁



"உங்கள் குழந்தைகள் 'வீல் வீல்' என்று கத்துகின்றனவா? அவர்கள் கதறலை நிறுத்த இதோ வழி! எங்கள் யானை மார்க் கர்சீப்புக்களை அவற்றின் வாயில் போட்டு அடையுங்கள். அழுகை மறையும்!"

❁

"என் மரணத்துக்கு அனுதாபம் தெரிவித்தவர்களுக்கெல்லாம் நன்றி. இறந்தது நான் இல்லை. என் கொள்ளுத் தாத்தா என்பதைக் கவனிக்கவும்!"

❁

அண்டை வீட்டுக்காரர்: கொஞ்ச நாளில் நான் உங்கள் பக்கத்து வீட்டுக்காரராக இருந்து கஷ்டப்படப் போவதில்லை. வேறு ஒரு நிம்மதியான இடத்துக்குக் குடி போய் விடுகிறேன்."

"நானும்தான்!"

"நீங்கள் எங்கு குடி போகிறீர்?"

"இங்கேயேதான் இருக்கப்போறேன்!"

❁



தலைவலி மாத்திரை ஏஜண்டின் டைரி: நான் முழுதும் கடை கடையாக அலைந்து விற்றது 10 ரூபாய்.

— அன்று மாலைக் கச்சேரியின் போது விற்றது 90 ரூபாய்!

❁

"இன்ஸ்டால்மெண்டில் பணம் கொடுத்து ஒரு வீடு வாங்கலாம் என்றிருக்கிறோம். நல்ல ஸ்ட்ராங்கான வீடா வேணும். கடைசி இன்ஸ்டால்மெண்ட் தாங்க கொடுக்கும் வரையிலும் வீடு ஸ்ட்ராங்கா இருக்கணும்!"

# சிரிக்காதே!

# அதிர்ஷ்டத்தை நம்பியிருக்க வேண்டாம்






நீங்கள்
எப்போதும்
எண்ணெய்
வாங்கும்போது

# காஸ்ட்ரால்

என்ற பெயரைக் குறித்தே கேளுங்கள்




**காஸ்ட்ரால் லிமிடெட்**

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது - அங்கத்தினர்கள் பொறுப்பு வரையறுக்கப்பட்டது
தலைமை ஆபீஸ் பம்பாய்

கிளைகள் மற்றும் டெப்போக்கள்: கல்கத்தா - சென்னை - புது தில்லி - அஹமதாபாத்
பெங்களூர் - கொச்சின் - லக்னோ - நாகபுரி - தேஜ்பூர் - செகந்திராபாத் - விஜயவாடா




அத்தியாயம் பன்னிரண்டு

மொட்டை மாடியில் வந்து உட்காரும் பொழுதெல்லாம் அனந்தசாமிக்கு ஓர் அனுபவம் ஏற்படுகிற வழக்கம். எண்ணம் ஒன்றுமில்லாமல் எந்த நினைவும் யார் நினைவும் இல்லாமல், எந்தக் காட்சியுமில்லாமல் வெறும் சூன்யமாக இருக்கும். கண்ணை மூடிக் கொண்டிருப்பார். தென்னையின் சலசலப்பைத் தவிர அந்த மனவெளியில் ஒன்றுமே இராது. அந்தச் சலசலப்பு கூடத் திடீரென்று காதில் விழாமல் போய்விடும். வெகு காலப் பழக்கமாக இதைச் செய்து கொண்டிருக்கிறார். அவருடைய உடம்பிலிருந்து ஏதோ ஒன்று கிளம்பி அந்தச் சூன்ய வெளியில் உந்தி உந்தி மேலே போய்க் கொண்டே யிருப்பது போலிருக்கும். கடைசியில் திடீரென்று அந்த மேல் பாய்ச்சலும் நின்று எல்லாம் அப்படியே ஸ்தம்பித்துநின்றிருக்கும். என்ன, எங்கே, எப்பொழுது - எதுவுமில்லாத மிதப்புதான் மிஞ்சி நிற்கும். தலையையோ, கையையோ அரித்து, சொரிந்து கொண்டாற்கூட, எறும்பு, கொசு கடித்துக் கை அதைத் தேய்த்தால்கூட அந்த மிதப்பு அப்படியேதான் நிற்கும். கலைந்தாலும் பாசிபோல் மறுகணமே கூடிவிடும். 'ராம ராம' என்று சொல்லக்கூட அவருக்கு மனசு வருவதில்லை அப்பொழுது. நானே சிவம் என்று சொல்லக்கூட விருப்பமில்லாத மிதப்பா யிருக்கும் அது.

இன்று அதையெல்லாம் காணவில்லை. ஏதோ துரத்திக் கொண்டுவந்து கடைசியில் அவரைப்பிடித்து விட்டாற்போன்ற ஓர் உணர்ச்சியில்தான் அவர் மௌனமாகச் சிரித்துக் கொண்டிருந்தார். நாற்காலியில் சாய்ந்திருந்தவர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து பின்னால் திரும்பிக்கூட ஒருதடவை பார்த்து விட்டார். அங்கு ஒன்றுமில்லை.

''மாமா!'' என்று குரல் கேட்டது.

தி. ஜானகிராமன்



''மாமா!'' - மறுபடியும் அந்தச் சிறு குரல் கேட்டது. குடியிருக்கிற நெய்க் கடை குமாஸ்தாவின் பிள்ளையின் குரல் தான் அது.

அனந்தசாமி திரும்பி ''யாரு?'' என்று கேட்டார்.

''கீழே யாரோ தேடிண்டு வந்திருக்கா.''

''யாரு?''

''யாரோ உங்களைப் பார்க்கணுமாம்.''

''சரி, வரச்சொல்லு'' என்று சொல்லி மறுபடியும் சாய்ந்து கொண்டார். பத்து விநாடி கழித்து. ''சாமி எங்கே இருக்கி ருங்க?'' என்ற குரல் கேட்டது.

''யாரு?'' என்று வினவினார்.

''தெரியலீங்களா - நான்தாங்க குருசாமி.''

''அடே வாப்பா.''

குரலைப் பிடித்துக் கொண்டே அவன் அறையைக் கடந்து மொட்டை மாடிக்கு வந்து விட்டான்.

''எங்கே இப்படி இருட்டிலே....?'' என்று சொல்லிக்கொண்டே வந்தான் அவன். வரும்பொழுதே அறையிலிருந்த ஒரு பிரம்பு நாற்காலியையும் தூக்கி வந்து அவர் எதிரே சற்றுத் தள்ளினாற் போல் போட்டான்.

''என்ன குருசாமி?''

''அம்மா வந்திருக்காங்க... வாங்கம்மா'' என்று கூப்பிட்டான் அவன்.

''அடேடே!'' என்று சட்டென்று எழுந்திருந்தார் அவர்.

''பெரியம்மா இல்லீங்க. ஊர் லேர்ந்து வந்திருக்காங்களே அந்த அம்மா...வாங்கம்மா, உட்காருங்க'' என்று நாற்காலியைக் காட்டி விட்டு, திரும்பினான் குருசாமி. உள்ளே போய்த் தட்டித் தடவி விளக்கைப் போட்டான்.

''நான் கீழே யிருக்கேங்க. வண்டியை நடு வாசல்லே நிறுத்தியிருக்கிறேன். ஓரமா நிறுத்தறேன்'' என்று சொல்லிக்கொண்டே கீழே இறங்கி விட்டான்.

''நீங்களா! நாகம்மான்னு நினைச்சேன். உட்காருங்கள்'' என்றார்.

ருக்மிணி வெள்ளை வெளேரென்று புடவை உடுத்தி யிருந்தது அந்த இருளிலும் தெரிந்தது. பளபளவென்று அவள் முகமும் கையும் வெள்ளையாக இருளில் அசைந்தன.

''உட்காருங்கள்.''

ருக்மிணி சுற்றிலும் பார்த்தாள். வேப்பமர இலைகளைக் கையால் தடவினாள். நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

அனந்தசாமிக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன பேசுவது என்றும் ஸ்புரிக்கவில்லை.

''காப்பியைக் கலந்து கொண்டு வந்தேன். உங்களைக் காணவில்லை'' என்றாள் ருக்மிணி.

''சாப்பிடுகிறாற்போல் இல்லை. மூன்று சர்பத் சாப்பிட்டாகி விட்டது அதுக்கு முன்னால்...''

''விவேகானந்தர் அந்த மூன்று சர்பத்திலேயே தரிசனம் தந்து காப்பியைச் சாப்பிடாதே என்று தடை உத்தரவு போட்டு விட்டார் போலும்!''

அதைக் கேட்டு, புன்சிரிப்புடன் அனந்தசாமி கண்ணை மூடிக் கொண்

டார். பதில் ஒன்றும் சொல்லவில்லை; மூடியவுமில்லை. அந்தக் குறும்பை ரஸித்துக் கொண்டே கண்ணைத் திறவாமல் மௌனம் சாதித்தார்.

"இல்லாவிட்டால் இரண்டாம் தடவையும் ஓடிப் போக வேண்டும் என்று உங்களுக்கு எப்படித் தோன்றும்?" என்றாள் ருக்மிணி.

அதற்கும் அவர் பதில் சொல்லவில்லை.

"நாகம்மாளைக் கேட்டேன், ஏன் என்று. ஓடுகிறவர்கள் ஓடிக் கொண்டே தான் இருப்பார்கள். நிற்கிறவர்கள்தான் நிற்க வேண்டும் என்று சொன்னாள் அவள். நான் உடனே நின்று விடுவதாகத் தீர்மானம் செய்து விட்டேன்."

அனந்தசாமி சட்டென்று தலைநிமிர்ந்தார். வேப்ப மர இலைகளின் பின்னணியில் அவள் முகத்தின் வெண்மைதான் தெரிந்தது. சொல் விளங்கவில்லை.

"நின்று விடுவதாக என்றால்...?"

"ஆமாம். நானும் பட்டணத்திலேயே இருந்து விடுவதாகத் தீர்மானித்து விட்டேன்" என்றாள் ருக்மிணி.

"அப்படியா?"

"ஆமாம். எனக்கு வேடிக்கையாக ஒரு எண்ணம் தோன்றுகிறது சொல்லலாமா?" என்று கேட்டாள்.

"சொல்லுங்கள்."

"சில சமயம் தபாலாபீஸ் தன்னை யறியாமல் செய்து விடுகிற குறும்புகள் பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்."

"என்ன?"

"யாருக்கோ போட்ட ஒரு கடிதம் தபால் பெட்டியிலோ, ஆபீஸ் பெட்டியின் இடுக்கிலோ மாட்டிக்கொண்டு விடுகிறது. இருபது வருஷங்கள் கழித்து அது எப்படியோ ஒரு சிப்பந்தியின் கையில் தட்டுகிறது. அவர் அதை ஆச்சரியமாக எல்லோரிடமும் காட்டி விட்டு விலாசதாரரிடம் சேர்த்து விடுகிறார். விலாசதாரரும் ஆச்சரியப்படுகிறார். பத்திரிகையில் இந்த விநோதச் செய்தியை அறிவிக்கிறார். இந்த ஆச்சரியம் ஒன்றுதான் அந்தக் கடுதாசியின் பிரயோசனம். அதில் உள்ள விஷயத்துக்கு இப்பொழுது எந்தவித அர்த்தமும் கிடையாது. அந்தக் கடுதாசி மாதிரி தான் ஆகி விட்டேன் என்று தோன்றுகிறது."

அனந்தசாமி மறுபடியும் கண்ணை மூடிக் கொண்டார். வந்து சேர்ந்த கடிதத்தை மனத்தாலேயே பார்த்தார். அதில் விழுந்த மறதியின் முத்திரைகளைப் பார்த்தார்.

"மற்றக் கடுதாசிகளைக் கிழித்தெறியலாம். கம்பியில் குத்தி வைத்துக் கொஞ்ச நாட்களில் கிழித்தெறியலாம். ஆனால் இந்த விநோதமான கடுதாசை யாரும்



இழக்க மாட்டார்கள். பத்திரமாக வைத்திருப்பார்கள். அர்த்தம் இழந்த இந்தக் கடுதாசி அப்படித்தான் நினைக்கிறது.''

'என்ன, சொல்லுங்கள்' என்று ஓரிரண்டு வார்த்தைகள் பேசின அனந்தசாமிக்கு இப்பொழுது அந்த வார்த்தைகள் கூட வரவில்லை.

''நான் டில்லி வேலையை ராஜிநாமா செய்துவிட்டு இங்கேயே வேலை பார்த்துக் கொண்டு தங்கிவிடப் போகிறேன். துறவியாக அலைகிற உங்களைத் தூர இருந்து பார்த்துக் கொண்டிருப்பேன். இல்லறத் துறவு எவ்வளவு புனிதமானதோ, அவ்வளவு புனிதமாக இருக்கும் துறவில்லறமும்...நான் வருகிறேன்'' என்று கூறி எழுந்தாள் ருக்மிணி.

''கொஞ்சம் உட்காருங்கள்.'' கையால் அமர்த்தினாற்போல் மீண்டும் உட்கார்ந்தாள் அவள்.

''தீர்மானம் செய்து விட்டீர்களா, இங்கேயே தங்குவதாக?''

''தீர்மானம் செய்து விட்டதாகச் சொன்னேனே!''

''நாகம்மாளுடன்தான் நீங்கள் தங்குவீர்களா?''

''ஆமாம். வீடு கிடைக்கிற வரையில். ஏன்?'' என்று வினவினாள் ருக்மிணி.

''கேட்டேன்...இந்த ஊர் பிடிக்கிறதா உங்களுக்கு?''

''பட்டணமா?''

''வேறு எது? நீங்கள் இங்கேதானே தங்கப் போகிறீர்கள்!''

''பட்டணம் எனக்குப் பிடிக்கத்தான் இல்லை. பசபசவென்று வேர்க்கிறது. அதுவும் பழைய பட்டணமாக இல்லை. நான் நாலைந்து தடவை இங்கே மூன்று நாலு நாட்கள் என்று தங்கினது உண்டு. சுற்றிச் சுற்றிப் பார்ப்பது உண்டு. அப்போது மாதிரி இல்லை. காடெல்லாம் வீடாகி விட்டது. மரங்கள் மனிதர்களாகி விட்டன. சாலையில் விழும் நிழல் கறுப்பு தார்க் கறுப்பாகி விட்டது. புது தில்லியின் அழகில் பத்தில் ஒரு பங்கு கூட இங்கே இல்லை. அங்கே பாடுகிற பட்சிகளில் ஒன்றுகூட இங்கே இல்லை. மாட்டுக் கொட்டிலில்கூட அறை கட்டி வாடகைக்கு விட்டு மாட்டை வெளியிலே கட்டி, வெயிலேயே தின்னச் சொல்லி விடுகிறார்கள்! எனக்குப் பட்டணம் பிடிக்கிறதில்லை. ஆனால் இத்தனை கஷ்டங்களும் சுகமாகத் தோன்றுவதற்குக் காரணம் இருக்கிறபொழுது நான் ஏன் தங்கக் கூடாது? சுப்புசாமி இன்று காலையில் விளையாட்டாகச் சொன்னார், நீ இங்கேயே தங்கி விடேன் என்று. நாகம்மாள் கூடச் சொன்னாள். அது இவ்வளவு விளையாகும் என்று அப்பொழுது நான் நினைக்கவில்லை'' என்று கூறிவிட்டு வானத்தைப் பார்த்தாள் ருக்மிணி.

''உங்களைப் புரிந்து கொள்வதே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது'' என்றார் அனந்தசாமி.

''நான் அந்தச் சிரமங்களெல்லாம் உங்களுக்குக் கொடுக்க மாட்டேன். நான்பாட்டுக்கு எங்கோ ஒரு வீட்டில் குடியிருப்பேன். நீங்கள் விருப்பமிருந்தால் வரலாம். ஆனால் கட்டாயம் இல்லை. நாகம்மாள் வீட்டுக்கு அடிக்கடி வருவேன்., அப்பொழுது பார்த்துக் கொள்வேன்...''

சற்று நிறுத்தி யோசித்து விட்டு மீண்டும் சொன்னாள் ருக்மிணி. ''அப்படியெல்லாம் சிரமம்கூட நினைக்காதவள் இங்கு ஏன் மெனக்கெட்டு வர வேண்டும், சொல்ல வேண்டும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் முப்பது வருஷங்கள் தினம் பத்து தடவையாவது நினைக்கிற ஒருவரிடம் எப்படிச் சொல்லாமலிருப்பது என்று புரியவில்லை. இல்லா விட்டால் பெண் மனசு ஆறாது. நான் வருகிறேன்'' என்று மீண்டும் எழுந்தாள் அவள்.

அனந்தசாமியும் எழுந்து நின்றார்.

அவள் முன்னால் நடந்து அறையை இரண்டு மூன்று விநாடி நின்று பார்த்தாள், நகர்ந்தாள். அனந்தசாமி தலை நிமிரவில்லை. பயமாயிருந்தது. அந்த மெல்லிய உயர்ந்த வடிவத்தில் ஒரு பெரிய மனிதத் தன்மை, சாதாரணப் பெண்களைவிட ஒரு கம்பீர அமைதி உயர்ந்து நின்றது.

''நான் வருகிறேன்'' என்று அவள் கடைசி முறையாகச் சொல்லிக்கொண்டபோது, எஜமானியம்மாளிடம் சொல்பவர் மாதிரி ''சரி'' என்று தலையைக் குனிந்து கொண்டே விடை கொடுத்தார். விறுவிறுவென்று முன்னால் நடந்து மாடிப்படி விளக்கைப் போட்டார். கூடவே கீழே இறங்கினார். கார் வரையில் கொண்டு விட்டார்.

திரும்பினார். மங்களப்பாட்டி யார், என்ன என்று கேட்கவில்லை. அவரைப் பார்க்க வருபவர்கள், நோயாளிகள்-இவர்களைப் பற்றி அவள் எதுவுமே கேட்பதில்லை.

அனந்தசாமி படி விளக்கையும், அறை விளக்கையும் அணைத்துவிட்டு, மீண்டும் மொட்டை மாடிக்கு வந்து நாற்காலியில் சாய்ந்தார்.

அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை. எழுந்து வேப்பமரத்து ஓரமாக நின்றார். சிறிது நடந்து வானத்தைப் பார்த்துக்

## பசியையும் வறுமையையும் விரட்டுங்கள்

வெகு காலமாக இருந்து வரும் பசிக்கொடுமையையும் வறுமையையும் விரட்ட, இந்தியமக்கள் செய்துவரும் போரில் கலிங்கா டியூபும் கலந்துகொண்டு அதனை பங்கைச் செய்ய ஆசைப்படுகிறது.





வருடத்தில் 40,000 டன்கள் உற்பத்தி செய்ய போதுமான எங்களது தொழிற்சாலை 1955 ஏப்ரல் மாதம் வேலை செய்யத்துவங்கியது. அதை பெரிதாக்கப் போட்டிருக்கும் திட்டம் இப்பொழுது செயலிலிருக்கிறது. எங்கள் திட்டப்படி 6" போர் டியூபுகளும் 'ஸ்லைப் ட்ராண்ஸ்' நீண்ட குழிகளும் உற்பத்தி செய்வதை 1961 மத்தியில் துவக்கப்படும்.
இலட்சியம் 1,00,000 டன்கள் பைப்புகளும் 3,00,000 நீண்ட குழிகளும் ஆகும்.

**கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்**
23, சித்தரஞ்சன் அவென்யூ, கல்கத்தா-12
தொழிற்சாலை
சௌதுவார், கட்டக், ஒரிஸா

KALPANA, KTM

---

# நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனஸின்'

| வலிகளைப் போக்குகிறது | நிம்மதி அளிக்கிறது | சோர்வை விரட்டுகிறது | ஜுரத்தைத் தணிக்கிறது |
| --- | --- | --- | --- |

ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக, விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் அனஸினில் ஒன்றுகலந்து இருப்பதால், வலிகளினின்று அதிவிரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது. (2) பதட்டத்தைப் போக்கி நிம்மதி அளிக்கிறது—இதனுடன் இணைப்பான பலனை நீங்கள் பெறுவீர்கள். (3) சோர்வை விரட்டுகிறது. (4) ஜுரத்தைத் தணிக்கிறது.
நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனஸின்' வலியினின்று நிவாரணம்பெற மிக சிறந்தது. வீட்டில் எப்பொழுதும் அனஸின் வைத்திருங்கள்.






★ [illegible] கிடைக்கிறது. 2 வில்லைகள் 13 [illegible]

**அனஸின் மிகச் சிறந்தது**

*Registered User:* GEOFFREY MANNERS & CO. LIMITED

TAM. Z. 4

கொண்டு நின்றார். மீண்டும் நடப்பார், நிற்பார். இடுப்பில் இரு கைகளையும் அழுந்த வைத்து நின்றார்.

பெரிய குற்றம் செய்து விட்டதுபோல் மனசு ஒரு நிலை கொள்ளாமல் பரந்தது. வயிறு கலங்கியது. ஏதோ அற்பத்தன மான காரியத்தைச் செய்து விட்டாற் போன்ற ஒரு பயம் அடிவயிற்றைக் கனமாக அடித்திருந்தது. நேர்மையான வன் கண்யமானவன், சுத்தமானவன் என்று உலகம் அறிந்த ஒருவன், உலகத் திடம் நடந்து கொண்டிருக்கிற ஒருவன் ரகசியத்தில் செய்த குற்றம்போல் அவர் மனசை ஏதோ ஒன்று நடுங்கச் செய்தது. நீசத்தனமான, கையாலாகாத, யாரும் இகழ்வது போன்ற ஓர் உணர்ச்சியில் கிடந்து நடித்தது உள்ளம். உள்ளம் மட்டுமில்லை. அந்த வேதனையில் முகம் கூடச் சுளித்துக் கொண்டது. 'ம்' என்று ஒரு தடவை வாய்விட்டுக்கூட அவர் முனகி விட்டார்.

மொட்டைமாடி கசந்தது. ராமநாமம் கூடச் சொல்லாமல் 'வெறும் சூன்யத்தை ஆழ்ந்து அனுபவித்துப் பழக்கமான மொட்டைமாடி இப்பொழுது நிற்கக் கூடாத பகை வீடு போலாகி விட்டது. விறுவிறுவென்று கீழே இறங்கிச் சமையல் அறையைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்தார். சந்தில் நடந்து மௌப்ரேஸ் சாலையைக் கடந்து, ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் திரும்பி, நேராகக் கிழக்கே பார்க்க நடந்தார்.

ருக்குவின் வடிவில் விரவிய கம்பீர அமைதி இந்தப் பழு உணர்வை இன்னும் அதிகப்படுத்தத்தான் செய்தது. முப்பது வருஷங்களாக ஒருவரை ஏமாற்றியா வந்திருக்கிறோம் என்ற திருப்பித் திருப்பி வந்த குரலைக் கேட்பதே வேதனையாயிருந் தது. கண்ணை இடுக்கி அந்தக் குரலைத் தவிர்க்கப் பார்த்தார். சைக்கிள் ரிக்ஷா, பஸ், கார்கள், மீர்சாப்பேட்டை சந்தடி, வெளிச்சம்-இத்தனைக்கும் நடுவில் அந்தக் குரல்தான் கேட்டுக் கொண்டிருந்தது.

இந்த உளைச்சலுக்கு மருந்து எங்கே இருக்கிறது? அவர் கையில் கர்ண கவச மாக ஒட்டிக் கொண்டிருக்கிற மருந் துப் பைகூட இப்பொழுது இல்லை.

'ராம ராம ராம' என்று சொல்லிக் கொண்டே போனார். அதைக்கூடப் பத்து பதினைந்துக்குமேல் சொல்ல முடிய வில்லை. உப்புக் கண்டம் போல, அதைத் திருத்திக் கொள்ள முடியாமல் தமக்கு வெளியே கக்கி விட்டது.

ரிஷிகேசத்து கங்கைக் கரை, அனுராத புரம், அமரநாதத்துப் பனிலிங்கம்— எல்லாவற்றையும் நினைத்தார். "எத்தனை வருஷங்களாக இப்படி வதை செய்ய வேண்டும்" என்று தீர்மானித்திருந் தீர்கள் என்று கேட்டார். தாமே பதில் சொல்லிக் கொண்டார்: நீங்கள் இல்லை, நான்தான் அதற்குக் காரணம் என்று.

கடற்கரைச் சாலை தெரிந்தது. பக்கிங் ஹாம் கால்வாயின் குடலைப் பிடுங்கும் நாற்றம்கூட அவர் மூக்கைப் பாதிக்க வில்லை. எந்தப் புலனும் வேலை செய்ய வில்லை அவருக்கு. எல்லாம் மனம் கீழே விழுந்து பட்டுக் கொண்டிருக்கிற அடி களைத்தான் நோக்கி நின்றன. பெசன்ட் சிலையை வலம் வந்து கொண்டு கடற் கரைச் சாலையில் ஏறினார். சிறிது தூரம் நடந்து தெற்கே பார்த்துப் போட்டிருந்த ஒரு சிமிண்டு பெஞ்சின் மீது உட்கார்ந்து கொண்டார்.

"வேர்க்கடலை சாமி" என்று பையன் ஒருவன் கூடையுடன் வந்து நின்றான்.

"சாமி!"

"........."

"ஓரணாவுக்கு வாங்கிப் போடு சாமி. விக்கிலே இல்லை சாமி."

"போடு!"

அவன் அளந்து கொட்டினான். மேலே போர்த்தியிருந்த உத்தரீயத்திலேயே வாங்கிக் கொண்டார்.

தின்னவில்லை. அப்படியே தலையைப் பெஞ்சின் முதுகின் மீது சாய்ந்து அண்ணாந்தார். வான்வெளியில் நீலமாக ஓர் எரிகொள்ளி எரிந்து கொண்டே பாய்ந்து மறைந்தது. மொட்டை மாடி யில் தெரியாத நட்சத்திரங்களெல்லாம் தெரிந்தன. தெற்குச் சாய்வில் சர்ப்பம் படம் எடுக்கிறாற் போல் ஒரு நட்சத்திரக் கூட்டம் வளைந்து நின்றது.

'திக் திக்'கென்று மார்பு அடித்துக் கொள்வதுகூட அவருக்குக் கேட்டது.

ஆணும் பெண்ணுமாக யார் யாரோ போனார்கள். அப்படி இரண்டு இரண்டு பேராக ஏழெட்டு அவர் கண்ணில் விழுந்து விட்டார்கள். வந்து உட்கார்ந்த திலிருந்து. நான் அன்று ஓடாமல் இருந் திருந்தால்...? அந்த எண்ணத்தைச் சற்றுத் தொடர்ந்து பார்த்தபொழுது சிரிப்பு வந்தது. இலேசாக வாய்விட்டுக் கூடச் சிரித்து விட்டார். திமாய்ஜி, கங்கை, புத்த ஸ்வாமி-எல்லா ஞாபகங் களும் அவருக்கு வந்தன.

அந்த ஒரு சிரிப்பில் வாயிலிருந்து தெறித்து விழுகிறாற் போல் உள்ளே யிருந்த வேதனையில் சிறிது தெறித்து வெளியே விழுந்தது. அந்தச் சிரிப்பு மனத்துக்குச் சற்றுஅமைதியைக் கொடுத் தது. இன்னும் நாலு தடவை சிரித்தால் கொஞ்சம் கொஞ்சமாக அந்தவேதனைகள் வெளியே தெறித்து முழுவதும் வெளிப் பட்டு விடுமோ என்னவோ? (தொடரும்)

# திருஷ்டி

பெரியோர்களால் நிச்சயித்தபடி சொக்கனுக்கு இன்று கல்யாணம். ஆனால் அந்தப் பெரியோர்கள் சுபயோக சுபமுகூர்த்தம் பார்த்து நிச்சயித்த நாளும் நட்சத்திரமும் கடந்து போய் எட்டு மாதங்களாகின்றன. அத்துடன் அவற்றை நிச்சயித்த அவர்களும் நிச்சயமில்லாத உலக வாழ்க்கையைக் கடந்து சென்று விட்டார்கள். அதனால் என்ன? அவர்களது நிச்சயிப்பின் பிண்டப் பிரமாணங்களான சொக்கனும் வேலம்மாளும் இருக்கிறார்கள். எனவே அந்த 'நாளும் நட்சத்திரமும்' இன்று 'இல்லாமல்' போனாலும், கல்யாணம் என்னவோ நடக்கத்தான் போகிறது.

மாப்பிள்ளை சொக்கன் தன் தோளில் தொங்கிய 'ஜோல்னாப் பையை'க் கழற்றிப் போட்டுக் கொண்டு வழக்கமாக உட்காரும் அந்தப் பெரிய தூங்குமூஞ்சி மரத்தடியில் சோர்வுடன் வந்து உட்கார்ந்தான். தேனாம்பேட்டை காங்கிரஸ் பொருட்காட்சி மைதானத்துக்கு எதிர்வாடையிலுள்ள மரங்களில் ஒன்று அது.

கள்ளெனத் தைக்கும் காலை வெயிலில் வெறும் வயிற்றோடு பல தெருக்களையும் சுற்றி வந்த களைப்பு அவனுக்கு. குளிர்ந்த மர நிழலின் காற்றைக் குடித்து ஓரளவு களைப்பு நீங்கியவனாய், பையைத் திறந்து தன் தொழிற் கருவிகளை வெளியே எடுத்தான். ஒரு குத்துத் தையல் ஊசி, முனைக் கத்தி ஒன்று, அரையடி நீளத்தில் ஓர் இரும்பு உலக்கை, ஒரு கொறடா, ஓர் ஆணி டப்பா, சதுரமான இரண்டு கூழாங்கற்கள், ஒரு தகரக் குவளை இத்யாதி. அப்புறம் ஒரு ஜோடி புதிய செருப்புகள், இரண்டு ஜோடி பழைய பாதரட்சைகள், ஐந்தாறு தோல் துண்டுகள், கிவி மார்க் பாலிஷ் டின்கள் இரண்டு — இவற்றை எடுத்துப் பிளாட்பாரத்தில் வரிசைப்படுத்தி அடுக்கினான். கடைசியாக ஒரு ஜதை உயர்ந்த ரக பூட்சுகள் புதிய மெருகுடன் வெளியே வந்தன. அவற்றைத் தன் மேல் துண்டால் பக்குவமாகத் துடைத்து மேலும் பளபளப்பாக்கி வைத்தான். அந்த பூட்சுகள் வெளியே வந்த பிறகுதான் அவன் பரப்பிய கடை 'களை' கட்டியது.

நேற்று அந்த பூட்சுகள் அவனிடம் ரிப்பேருக்கு வந்தபோது குப்பைத் தொட்டியில் வீசியெறிய வேண்டிய நிலையில் இருந்தன. அவற்றைத்தான் இத்தனை அழகாகப் புதுப்பித்து விட்டிருக்கிறான் சொக்கன் — அதுவும் இந்த அற்பமான கத்தி கப்படாக்களைக் கொண்டு! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அல்லவா!

''என்னடா சொக்கா! இன்னைக்கு என்னமோ உனக்குக் கண்ணாலம் கின்னாலம்னு சொல்லிக்கினு இருந்தியே, எல்லாம் நடந்து போச்சா?'' என்று அந்த மரத்தின் பின்னிருந்து ஒரு குரல் வந்தது. சொக்கன் திரும்பிப் பார்த்தான். பீடி புகைத்தவாறு வாடகைக்காரத் தங்கவேலு அங்கு உட்கார்ந்திருந்தான்.

''இப்பத்தாண்டா வந்தேன்'' என்றவாறே பீடியைப் பாதியில் அணைத்துக் காதில் செருகிக்கொண்ட தங்கவேலு, ''அது சரி; நான் கேட்டதுக்கு நீ ஒண்ணும் பதில் சொல்லலியே?'' என்றான்.

''கண்ணாலம்தானே? அது இன்னைக்குச் சாயரட்சை வைச்சிருக்கு!'' என்று அசுவாரசியமாகச் சொன்னான் சொக்கன்.

''ஓ!.... நடு ஊட்டுத் தாலி கட்டப் போறயா? அப்ப சரி!'' என்று தலையாட்டிக் கொண்ட தங்கவேலு, ''இருந்தாக்கூட இன்னைக்கு ஒரு நாளாவது தெருமேலே வராம ஊட்லே குந்திக்கினு இருக்கக் கூடாது, ஏண்டா கயிலாத்து?'' என்று கடுகடுத்தான் பல நாட்கள் பழகிய உரிமையுடன்.

''ஆமாண்ணே! அந்தப் பொண்ணுகூட அப்படித்தான் சொன்னு; நான்தான் பொறப்பட்டு வந்துட்டேன்!'' என்று சலித்த குரலில் இழுத்தான் சொக்கன். மீண்டும் அவன் தொடர்ந்து, ''இந்தப் பூட்ஸ் ரெண்டையும் ரிப்பேர் பண்ணிக் கொடுக்கச் சொல்லி நேத்திக்கு ஒரு மைனர் வந்தாரே, நீ பார்க்கலியா?'' என்று கேட்டான்.

''ஆமாம்; அதுக்கு இன்னா இப்போ?''

''பன்னெண்டணா கூலி பேசினேன். 'பத்து நிமிசத்திலே ரிப்பேர் பண்ணிவையிடா இதோ வந்துடறேன்'னு சொல்லிப்பிட்டுப் போனாரு. சாயந்திரம் ஆறு மணியாகியும் ஆளே வரல்லே. இன்னைக்கு அவரு வந்து இங்கே தேடினா என்ன பண்றதுன்னு பொறப்பட்டு வந்தேன். பன்னெண்டணா கிடைச்சா இன்னைய செலவுக்குத் தோதுப்படியாவும். அதுக்குத்தான், அண்ணே!''

''போடா, பொழைக்கத் தெரியாத கய்தே! ஆளு வரல்லேன்னா ஆம்புட்டது லாபம்னு ரெண்டு பூட்சுகளையும் மோர்மார்க்கட் புட்டிக்காரன்கிட்டே போட்டுப்பிட்டு ஒண்ணோ ஒன்றரையோ கிடைச்சதை வாங்கி ஜோபிலே ரொப்பிக்கினு நீட்டா நடையைக் கட்டாம, ...த்தூ! இத்தைக் கூடவாடா உனக்குச் சொல்லிக் கொடுப்பாங்க?''

சொக்கன் இதைக் கேட்டு மெல்லத் தலையைச் சொறிந்து கொண்டு, ''சே! அந்த மாதிரி பேமானி வேலையெல்லாம் யாரண்ணே செய்வான்? நமக்கு



ஜெகசிற்பியன்

வாணான்னே ஊராமூட்டித்துட்டு!'' என்றான். ஆனாலும் அவன் மனத்தில், 'இப்படியும் செய்திருக்கலாமோ?' என்ற தொரு கேள்விஆசைப்பசையுடன் ஒட்டாமல் இல்லை.

இதைக் காதில் வாங்க முடியாதபடி வாடக்காரனின் கவனம் வேறொரு திசையில் திரும்பியது. ''யாரு, பல்ராம் நாய்க்கரா? இன்னா மச்சான், மாடு ரெண்டும் நொண்டியடிக்குது?...சரிதான்; பின்னங்காலு வாடம் தேஞ்சிப்போயி கொளம்பிலே ஆணி ஊணுது!'' என்று இரைந்து சொல்லிக் கொண்டே எழுந்து, அந்தப் பக்கமாகப் போன செங்கல் வண்டியொன்றை நோக்கி ஓடினான்.

சொக்கன் தன் தொழிலை ஆரம்பித்தான். பையிலிருந்து நீண்ட சதுரமான ஒரு டயர் துண்டை எடுத்து இரும்பு உலக்கையால் இரண்டு தட்டுத் தட்டிப் படிமானம் ஆக்கிக்கொண்டு, அதன்மேல் தன்னுடைய பாதத்தை வைத்துப் பாதரட்சையின் அடிப்பாக வடிவிலே ஒரு கோட்டைக் கீறினான். பிறகு மொக்கைக் கத்தியொன்றின் முனையைக் கூழாங்கல்லின் மேல் 'படக், படக்' என்று தீட்டிக்கொண்டு, டயரைக் காலிடுக்கில் விட்டு அழுத்திப் பற்றியவாறு 'வறக், வறக்' கென்று அறுத்தான். பாதியளவுக்கு அறுபட்ட டயர் அதற்கு மேல் அந்த மொக்கைக் கத்திக்கு வணங்கிக் கொடுக்காமல் 'மக்கர்' செய்ய ஆரம்பித்தது. 'நாமர் தாப் பய மவனது. இரும்புக் கணக்கா இறுகிப் போய்க் கெடக்கே! தண்ணியிலே ஊறப்போட்டுத் தான் அறுத்து எடுக்கணும்!'' என்று முனகிக் கொண்டே தவலையுடன் எழுந்த சொக்கன், அப்போதுதான் ஏதோ ஓர் அதிசயத்தைக் கண்டவன்போல் வியப்புடன் நின்றான்.

எதிர்ப் பக்க நடைபாதையோரமாக நூற்றுக் கணக்கான கார்கள் வரிசை வரிசையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. காங்கிரஸ்



பொருட்காட்சி மைதானத்தின் பிரதான வாயிலில் வாழை மரங்களாலும் தோரணங்களாலும் வனப்புற அலங்கரிக்கப் பெற்ற கல்யாண முகப்புப் பந்தல் ஒன்று காணப் பட்டது. அதன் இரு பக்கங்களும் பொருத்தப்பெற்ற ஒலிபெருக்கிகளிலிருந்து காதுக்கினிய நாதஸ்வர கானம் காற்றில் இழைந்து வந்து கொண்டிருந்தது.

பந்தல் முகப்பில் புன்முறுவலுடன் நின்று கொண்டிருந்த வரவேற்பாளர்கள், காரில் வந்து இறங்கும் பெரிய பெரிய கனவான்களையும் நவநாகரிக நாரீமணிகளையும் அன்புடன் வரவேற்று உள்ளே அனுப்பிக் கொண்டிருந்தனர். இதை வேடிக்கை பார்ப்பதற்கென்றே சாலையின் இருபக்கங்களும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் நெருக்கியடித்துக் குழுமி நின்று கொண்டிருந்தனர். அவர்களைக் கட்டுப்படுத்திச் சமாளிப்பதற்காக அங்கு ஒரு பெரிய போலீஸ் பட்டாளமே இறங்கிவிட்டிருந்தது. அவ்வப்போது சில இளைஞர்கள் போலீஸ்காரர்களுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு உள்ளே புக முயல்வதும், உடனே போலீஸார் அவர்களைத் தடுத்து இழுத்து விரட்டியடிப்பதுமாக ஒரு விநோத ஆட்டம் அங்கு நிகழ்ந்து கொண்டிருந்தது.

சொக்கனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் தயங்கி நின்றான். காரணம், இத்தனை நாட்களாக அந்த மைதானத்துக்குள்ளிருக்கும் ஒரு குழாய்க்குப் போய்த்தான் அவன் தண்ணீர் பிடித்துக் கொண்டு வருவது வழக்கம். இப்போது அங்கே எப்படிப் போவது என்று அவனுக்கு யோசனையாகி விட்டது.

செங்கல் வண்டியின் பின்னால் போயிருந்த லாடக்காரத் தங்கவேலு உற்சாகமாகத் திரும்பி வந்து சேர்ந்தான். சாலையின் வலப் பக்கச்சாரியில் முற்றுப் பெறாமல் எழும்பி நின்ற புதிய கட்டட மொன்றுக்காகச் செங்கற்கள் இறக்கிவிட்டுத் திரும்பி வரும்போது, தன் வண்டி மாடுகளுக்கு லாடம் அடித்துக் கொள்வதாகப் பலராம நாயக்கன் சொன்ன தன்பேரில், தங்கவேலுவுக்கு அந்த உற்சாகம்!

வாயைப் பிளந்தபடி நின்ற சொக்கன், தங்கவேலுவைப் பார்த்து, "என்னண்ணே அங்கே விசேசம்? இப்பத்தானே எக்சிபிசனை இளுத்து மூடினாங்க? அதுக்குள்ளாற இன்னொண்ணைத் தொறந்துட்டாங்களா?" என்று கேட்டான்.

"போடா, நாட்டான்ஸ்! உனக்கு விசயம் தெரியாதா?" என்று கலகலவெனச் சிரித்த லாடக்காரன், "அங்கே இண்ணிக்கு ஒரு சினிமா ஷ்டாரு ஊட்டுக் கண்ணாலம் நடக்குதுடா!" என்று விளக்கினான்.

"சினிமாக்காரங்க கண்ணாலமா? அவங்களுக்கு எதுக்குக் கண்ணாலம்?" என்று பேதைமைக் குரலில் கேட்டான் சொக்கன்.

"ஏண்டா, ஏண்டா? சினிமாக்காரங்க கண்ணாலம் கட்டிக்கப்படாதா?" என்று குறும்பாக வினவினான் லாடக்காரன்.

"இல்லே! அதுக்கெல்லாம்கூட அவங்களுக்கு நேரமிருக்குமான்னுதான் கேட்டேன்" என்று இழுத்தான் சொக்கன்.

"டேய், பெரிய ஆளுடா நீயி!" என்று கூறிக் கலகலவென்று நகைத்த தங்கவேலு, "விமல்குமாருன்னு ஒரு பெரிய சினிமா ஆக்டரு இருக்கிறானில்லையா? அவனோட சொந்தப் பொஞ்சாதியின் தங்கச்சிக்குக் கண்ணாலமாம்!" என்றான் அலட்சியமாக.

"அதுக்கு ஏன் இங்கே வரணும்? அவனுக்கு ஊடு வாசல் இல்லையா?" என்று மிகவும் அக்கறையாக விசாரித்தான் சொக்கன்.

"போடாங்க, சோதா! இது என்ன உன்னியப்போல நடுரோட்டுத் தாலி கட்டற கண்ணாலம்னு நினைச்சுக்கிட்டு இருக்கிறியா? பொண்ணையும் மாப்பிள்ளையும் பார்த்து விஞ்சாரிக்க ஆயிரக்கணக்கிலே பெரிய பெரிய ஆளுங்களெல்லாம் வருவாங்க. அவங்க உக்கார இடம் வாணுமா? அதுக்குத்தான் கொட்டக் கூலிக் கட்டி இந்தப் பெரிய மைதானத்தை எடுத்திருக்கிறான். தெரிஞ்சுதாடா?" என்று விளக்கினான் லாடக்காரன்.

"ஓகோ" என்று தலையசைத்துக் கொண்ட சொக்கன், மேலண்டைப் பக்கமிருந்த டீக்கடை நாயரிடம் போய் ஒரு குவளைத் தண்ணீர் வாங்கி வரலாம் என்று கிளம்பினான்.

அந்த டீக்கடையைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடி நின்றது. தன் வியாபாரத்தையும் கவனியாமல் அங்கு நின்றிருந்தவர்களிடம் ஏதோ சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருந்தான் நாயர்.

டீக்கடையைப் பார்த்ததுமே சொக்கனுக்குப் பசி குமுறிக் கொண்டு எழுந்தது. அவன் சாப்பிட்டு இரண்டு நாட்களாகின்றன. இந்த லட்சணத்தில் இன்று அவனுக்குக் கல்யாணமாம். அந்தக் கல்யாணத்துக்காகத் தான் அவன் கடந்த மூன்று நாட்களாகப் பட்டினி கிடக்கிறான். வேடிக்கையாக இருக்கிறதா? விஷயம் இதுவே:

இன்று நடக்கவிருக்கும் அவனுடைய கல்யாணம், எட்டு மாதங்களுக்கு முன்பே நல்லபடியாக நடந்து முடிந்திருக்க வேண்டியது. ஆனால் அப்படி நடக்கவிடாமல் தடுத்துப் 'புண்ணியம்' கட்டிக் கொண்டன அப்போது வீசிப் பொழிந்த புயற்காற்றும் பேய்மழையும். கல்யாணத்துக்கு ஐந்து நாட்கள் இருக்கும் போது சாடிக் கொட்டிய அந்தக் காற்று மழையில் புதுப்பேட்டை பக்கிங்காம் கால்வாய் ஓரமாக அவன் போட்டுக் குடியிருந்து வந்த அந்தக் குடிசை அடித்துக் கொண்டு போய்விட்டது. அத்துடன் மழையிலும் குளிரிலுமாகக் கிடந்து பட்டினியால் வதைபட்ட சொக்கனின் அப்பனும் ஆத்தாளும் ஒருவர் பின் ஒருவராகக் கண்ணை மூடிவிட்டார்கள். வெள்ள நிவாரண நிதியிலிருந்து வீடு கட்டிக்கொள்ளக் கிடைத்த நொள்ளைப் பணம் பத்து ரூபாயைச் சொக்கன் தன் பெற்றோரின் சடலங்களைப் புதைப்பதற்குத் தான் செலவழித்து முடித்தான்.

மழை நின்றது. சொக்கனின் கல்யாணமும் நின்று போயிற்று. அவனுக்கு நிச்சயம் பண்ணி வைத்திருந்த வேலம்மாளின் அப்பனும் அந்த மழைக்கும் புயலுக்கும் பலியானவர்களில் ஒருவனாகி விட்டிருந்ததால், நத்தைக்குத் தன் ஓடே வீடு என்பது போல அவர்கள் அதே

பக்கிங்காம் கால்வாய் ஓரத்தில் மீண்டும் ஒரு குடிசை கட்டிக் கொண்டு, கல்யாணமில்லாமலே கணவனும் மனைவியும் போல் வாழ ஆரம்பித்தனர்.

இவர்களின் திருமணப் பேச்சு தொடங்குவதற்கு முன்னமேயே இருவரும் ஓரளவு பரிச்சயமானவர்களாகவே இருந்தார்கள். அப்போது வேலம்மாள் பெரியமேட்டு சத்தார் சாகிபு என்பவரின் தோல் மண்டி யொன்றில் தினக்கூலி எட்டணாவுக்கு வேலை செய்து கொண்டிருந்தாள். இரண்டொரு முறை சொக்கன் அந்தத் தோல் மண்டியில் தோல் வாங்கப் போனபோது அவர்களுக்குள் பேச்சுப் பழக்கம் ஏற்பட்டது. இதையெல்லாம் 'காதல்' என்ற 'பெரிய' விஷயங்களோடு ஒப்பிட்டுவிடக் கூடாது. என்னமோ பார்த்தார்கள், பார்த்தவர்கள் பேசினார்கள். இருவர் மேலும் ஒரே மாதிரியான தோல் நாற்றம் வீசியது. அதுதான் அவர்களை ஒன்றாக்கியது. விஷயம் அவ்வளவுதான்.

தாலி என்னும் வேலி மறைப்பைக் கொண்டே மனித சமூகம் தன் மனத்தின் இன்ப அவசங்களை நிறைவாக்கிக் கொள்ள வேண்டுமென்பது ஒரு நல்ல விதிதான் என்றாலும், அதற்கு நியாயபூர்வமான உத்தரவாதமளிக்க இன்றைய பலஹீன சமூக அமைப்புக்குத் திராணி ஏது? எனவே, வேலம்மாள் தாலி என்ற வேலியின் மறைப்பை நாடாமலே 'பிள்ளை வரம்' என்ற பெரிய வரப் பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டுவிட்டாள். இப்போது அவள் ஏழு மாதக் கர்ப்பிணி!

அதைப் பற்றி அவளோ அவள் 'கணவனோ' கொஞ்சமும் கவலைப்படவில்லை. கற்பு நெறியைக் கீழே தள்ளித் திருமணச் சடங்கை மட்டும் கெட்டியாகப் பிடித்துத் தொங்கலாடிக் கொண்டிருக்கும் நாகரிக சமூகத்தாரை விட்டு வெகுதூரம் ஒதுங்கிப் போய் வாழ்ந்து கொண்டிருக்கும் அவர்களுக்கு அது அவசியமாகவும் தோன்றவில்லை. இப்படியிருந்தவர்களின் மனத்திலே, பல்லுதிர்ந்த கிழவியொருத்தி வந்து எப்படியோ அந்த ஆசையை எழுப்பிவிட்டு விட்டாள்.

ஆமாம்; சொக்கன் குடிசைக்குப் பக்கத்தில் அவனுடைய இனத்தைச் சேர்ந்த வேறொரு குடும்பம் புதிதாகக் குடிசை போட்டுக்கொண்டு வந்து சேர்ந்தது. அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த கிழவி யொருத்திதான் வேலம்மாளின் காதில் இரகசியமாகப் போட்டு வைத்தாள்: "அடி, பொண்ணே! கன்னி கழியாமலே இப்படி வயித்தைச் சாய்ச்சுக்கிட்டு நிக்கிறியே, இது பொறக்கப் போற புள்ளைக்கில்லே தோசமாவும்? நடு ஊட்டிலே உக்காந்து மஞ்சாத் தண்ணி கத்திக் கன்னி கழிப்பை எடுத்துப்பிட்டு ஒரு மஞ்சா நூலையும் போட்டுக்கிறதுக்கு என்ன?"

தாயாகி நின்ற வேலம்மாள் தாலியின் மகிமையை அப்போதுதான் உணர்ந்தாள். தன் வீட்டுக்காரனிடம் விஷயத்தைத் தெரிவித்தாள். சொக்கனுக்கு இதில் கொஞ்சமும் ஆட்சேபணை இல்லை. ஆனால் அந்தக் 'கன்னிக் கழிப்பு'ச் சடங்குக்குக் குறைந்தபட்சம் ஐந்து ரூபாயாவது வேண்டுமே, அதற்கு எங்கே போவது? அதை நடத்திவைக்க வரும் பக்கத்துக் குடிசை வீட்டாருக்கு ஒரு வேளைச் சோறாவது ஆக்கிப்போட வேண்டுமே! என்னதான் நடுவீட்டுத் தாலி கட்டினாலும் கல்யாணம் கல்யாணம்தானே?

இதற்காக அவர்கள் ரொம்பவும் கவலைப் பட்டுக் கொள்ளவில்லை. இரண்டு நாள் வரும் படியைச் செலவு செய்யாமல் அப்படியே முடிந்து வைத்துக்கொள்ள வேண்டியது; மூன்றாம் நாள் மாலை அந்தக் 'கன்னிக் கழிப்பு'க் காரியத்தைச் செய்து முடித்துவிட வேண்டியது — இப்படித் தீர்மானித்துக் கொண்டார்கள். தீர்மானம் செயல்பட்டது. சொக்கனின் குடிசையில் சேர்ந்தாற்போல் இரண்டு நாட்கள் அடுப்பு எரியவில்லை. பச்சைப் பட்டினி. அதனால் என்ன? அவர்கள் இட்டப் படி நாலேகால் ரூபாய் சேர்ந்து விட்டது. இன்று காலை அந்தப் பணத்தை வேலம்மாளிடம் அளித்துக் கொடுத்துவிட்டு, இதோ வெறும் வயிற்றோடு புறப்பட்டு வந்திருக்கிறான் சொக்கன். இந்நேரம் அவனுடைய குடிசையில் 'கல்யாண விருந்துச் சாப்பாடு' தயாராகிக் கொண்டிருக்கும்!...

சொக்கனுக்கு வயிற்றைக் கிள்ளியது பசி. தன் இடுப்பில் பத்திரமாகச் செருகி வைத்திருந்த பழைய மணிபர்ஸ் ஒன்றை வெளியே எடுத்துத் திறந்தான். அவன் கைப்படத் தயாரித்த அதிலே மூன்று நயாபைசாக்கள்தான் இருந்தன. சிங்கிள் டீ ஆறு பைசா அல்லவா? டீ குடிக்க வேண்டுமென்ற ஆசை அழிந்தது. 'அந்த மைனர் வந்து காசு கொடுத்தாப் பார்த்துக்கலாம்' என்று தன் வயிற்றுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, டீக்கடை அருகில் போய் ஒதுங்கி நின்று, "நாயர்! இதிலே கொஞ்சம் தண்ணி ஊத்தறயா? அப்பறமா உனக்கு நான் ஒரு பக்கட் தண்ணி புடிச்சாந்து தர்றேன்" என்றான்.

டீக்கடை நாயருக்கு அவன் சொன்னது காதில் விழவில்லை. தன்னைச் சுற்றி நின்றவர்களிடம் வெகு உற்சாகமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தான். கொஞ்ச நேரம் கழிந்த பிறகுதான் அவன் பேசிக் கொண்டிருக்கும் விஷயம் அந்தச் சினிமா நடிகனின் வீட்டுக் கல்யாணத்தைப் பற்றியது என்பதைச் சொக்கன் புரிந்து கொண்டான். நாயரின் கையில் திருமண அழைப்புப் பத்திரிகை ஒன்று இருந்தது. அதன் அடக்கச் செலவு மட்டும் ஐந்து ரூபாய்க்கு மதிப்பிடலாம்; அத்தனை அழகாக அச்சிடப்பட்டிருந்தது அது. நாயருக்கு எப்போதுமே சினிமாக்காரர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதிலே ஒரு தனி ஆனந்தம். இப்போது அந்தப் பிரபல நடிகனின் குணாதிசயங்களையும், அவன் தன் மைத்துனியின் கல்யாணத்துக்காகச் செய்திருக்கும் பிரமாத ஏற்பாடுகளையும் கதை கதையாக அளந்து கொண்டிருந்தான். சொக்கனுக்கு அதையெல்லாம் கேட்கச் சிறிதும் ஆர்வமில்லை. அவனால் அவற்றைப் புரிந்து கொள்ளவும் முடியவில்லை. வேறு எங்காவது தண்ணீர் கேட்டுப் பார்க்கலாம் என்று திரும்பியவன் சட்டென்று நின்றான். நாயர் சொன்ன ஒரு விஷயம் அவன் கவனத்தைக் கவர்ந்தது.

"...ஆமாங்கய்யான்னா! காய்கறி மட்டும் ஒரு லாரி நிறையப் போயிருக்கு; அப்பா,

அரிசி எவ்வளவு செலவாகும்னு பார்த்துக்குங்க ! நூறு டின் நெய்யும், முப்பது மூட்டை பருப்பும் உள்ளே போனதை இங்கிருந்தபடியா நான் கவனிச்சுக்கிட்டுத்தான் இருந்தேன். பால் டிப்போவையே விலைக்கு வாங்கிட்டாப்பலே கம்பா கொடம் கொடமா பால் போயிருக்கு உள்ளே !'' என்று கண்ணையும் கையையும் அகல விரித்தான் நாயர்.

கூட்டத்திலிருந்த ஒருவன், "அது சரி; விருந்து இன்னா, மிலிட்ரியா ? சைவமா ?'' என்று ஆவலுடன் கேட்டான்.

"அட, யார்ரூவன் ! கல்யாண விருந்திலே மிலிட்ரியாடா வைப்பாங்க ?'' என்று அவனுடைய அறியாமையைப் போக்கி வைத்தான் இன்னொருவன்.

"ஆமா, பாருங்க ! சில பேருக்கு மட்டும் ஸ்பெஷலா 'அதுக்கு' ஏற்பாடு பண்ணியிருக்கிறாப்பலே இருக்கு ! இல்லேன்னா, ஏழெட்டுக் கோழிக்கூடைகள் எதுக்கு உள்ளே போயிருக்கும் ? நம்ம விமல்குமார் இருக்கானே, அவனுக்கு மூணு வேளையும் கோழிக்காலைக் கடிக்காமப் போனா சாப்பிட்டாப்பலே இருக்காதாம் ! அவனோட கார் டிரைவர் எனக்கு ரொம்ப வேண்டியவன் ; அவன்தான் இதையெல்லாம் கதை கதையா சொல்வான் ! இந்தக் கல்யாணப் பத்திரிகையைக் கொடுத்தவன்கூட அவன்தான் !'' என்று அலட்சியமாகச் சொல்லி ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டான் நாயர். அங்கிருந்த அவ்வளவு பேரையும் விட இந்த விஷய ஞானத்தில், தான் உயர்ந்து நிற்கிறோம் என்ற பெருமை அவன் உள்ளத்தைக் கிளுகிளுக்கச் செய்தது. கையிலிருந்த கல்யாணப் பத்திரிகையைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டான்.

"அப்பாடன்னா, இப்ப அந்தக் கண்ணுல விருந்துக்குப் போயி, மூக்குப் பிடிக்க ஒரு இழுப்பு இழுத்துட்டு வருவேன்னு சொல்லு?'' என்று உள்ளடங்கிய ஏக்கக் குரலில் கேட்டான் ஒருவன்.

"இதோ, இப்ப கடையை மூடிப்பிட்டு அங்கேதான் போகப் போறேன். வாண்டரியிலே விருந்து சலவைத் துணி வரணும். அதுக்குத்தான் காத்துக்கிட்டு இருக்கிறேன். பெரிய இடமாச்சே, இப்படியே போவலாமா ?'' என்று கரிபழுக்குப் படிந்த தன் முண்டுத் துணியைப் பார்த்துக் கொண்டான் நாயர்.

"இப்படியே போனா, கழுத்தை முறுக்கி வெளியே வெரட்டி அடிப்பாங்க, இல்லியா?'' என்று கேட்டான் ஓர் இளைஞன்.

"ஆமா, தம்பி ! உன்னியே போல ஆளுங்க போனா அப்படித்தான் நடக்கும், இதுகூட என்ன, இனா டைனா கண்ணுலமா?'' என்றான் டீக்கடை நாயர்.

"அப்போ, எல்லா சினிமா ஸ்டாருங்களும் வருவாங்கன்னு சொல்லு ?''

"பின்னே ? அவங்கல்லாம் ரொம்ப ஒத்துமை ! அவங்களுக்குள்ளே ஒரு கண்ணாலம்—சாவுன்னா, காஷ்மீர்லே இருந்தாக்கூடப் பறந்தடிச்சு ஓடியாந்துடுவாங்க ! நம்பளைப் போலயா ?''

"அதோ, அதோ! நிர்மலாராணி போறான்! அவன்தான் ! அவளேதான் !''

டீக்கடையில் நின்ற கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு முன்னே பாய்ந்தது. நாயர் கடையை மூட ஆரம்பித்தான்.

சொக்கன் வெறுங் குவளையோடு தன் இடத்துக்குத் திரும்பி வந்தான். அவன் மனத்தில் ஒரே பிரமிப்பு. 'ஒரு லாரி நிறைய காய்கறி, முப்பது மூட்டைப் பருப்பு, நூறு டின் நெய், குடம் குடமாகப் பால்'—இவற்றை அவனால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. அவ்வளவு வியப்பு ! ஆனாலும் அதையே திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்தான். அப்படி எண்ணுவதிலே ஒரு சுகம். வாயில் நீர் சுரந்தது. வேலை செய்ய வேண்டுமென்ற உற்சாகம் போய்விட்டது. எதிரே தெரிந்த அந்தக் கல்யாணப் பந்தலையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

வாடகைக்காரத் தங்கவேலுவுக்கு 'கிராக்கி' கிடைத்து விட்டது. வண்டி மாட்டைக் கீழே தள்ளி அதன் வயிற்றின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு தன் வேலையில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தான்.

"இன்னாய்யா ! இந்த ஜோடு விக்கிறது தானே ?'' என்று கேட்டுக் கொண்டே தலைமேலிருந்த நுங்குக் கூடையைக் கீழே இறக்கினாள் ஒரு பெண்.

சொக்கன் நிமிர்ந்து உட்கார்ந்தான். நுங்குக்காரி அந்தப் பழைய செருப்புகளில் ஒரு ஜோடியை எடுத்துத் தன் கால்களில் போட்டுப் பார்த்தாள். சரியாக இருந்தது.
"இன்னா வெலையாம் ?'' என்று கேட்டாள்.

"ஒரே பேச்சு ; ரெண்டு ரூவா '' என்றான் சொக்கன். அவன் கவனம் கல்யாணப் பந்தலின்மேலிருந்தது.

"இன்னா ! ரெண்டு ரூவாயா ?''

"அதுதான் சொன்னேனே !''

"அப்புறம், கொடுக்கிற வெலை ?''

"நீயே சொல்லு.''

"ஒரு ரூவா தர்றேன் !''

"சரி; துட்டைப் போடு !'' என்றான் சொக்கன் சலிப்பாக.

நுங்குக்காரி மறுபடியும் அந்தச் செருப்புகளைத் தன் காலில் போட்டுப் போட்டுக் கழற்றிப் பார்த்தாள். பிறகு திருப்தியுடன் தலையசைத்துக் கொண்டு, "சரி; இதுகளை இப்படியே வெச்சிரு. திரும்பி வரப்போ உனக்குத் துட்டு கொடுத்துட்டு வாங்கிக்கிறேன் !'' என்று சொல்லிக்கொண்டே அங்கிருந்து நகர்ந்தாள்.

"வெறுங் கையை வெச்சுட்டுப் போறயா ? போய்து விடிஞ்சாப்பலேதான் !'' என்று எரிச்சலுடன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான் சொக்கன்.

வெயில் கரகரவென்று ஏறிக் கொண்டிருந்தது. மணி பதினொன்றுக்குமேல் இருக்கும். சொக்கனுக்கு வயிற்றை முறுக்கிப் பிழிந்தது பசி. நேற்று பூட்சுகளை ரிப்பேர் செய்யக் கொடுத்த அந்த மைனர் வந்துவிட்டானானால், உடனே கிளம்பி விடலாம். ஆனால் இன்னமும் அவன் வந்து தொலையவில்லையே !

சொக்கன் திரும்பிப் பார்த்தான். லாண்டரியிலிருந்து வாங்கிவந்த உடைகளை 'ஜில்' லென்று அணிந்துகொண்டு கடையின் முகப்

யில் நின்று கொண்டிருந்தான் நாயர். கல்யாண விருந்துக்கு அவன் கிளம்பி விட்டான் போலும்!

'இந்த மாதிரி கன்னாலத்துக்குப் போற துன்னு நல்ல துணிமணி இருக்கனுமாக்கும்' என்று எண்ணிக் கொண்ட சொக்கன், தன்னைத்தானே ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தான். இடுப்பிலே சேலேறிப் போன அழுக்கு வேட்டி; தோளிலே ஒரு கந்தல் துண்டு—இவ்வளவே அவன் அணிந்திருந்த ஆடைகள். இந்தக் கோலத்திலே தான் இன்று மாலே, வேலம்மாளின் கழுத்திலே தாலி கட்டப் போகிறான்!...இதுவரையில் இல்லாத ஏதோ ஒருவித அவமானம் இப்போது அவன் நெஞ்சை உறுத்தியது.

நாயரைக் காணோம். அவன் கல்யாண வைபவத்துக்குப் போய் விட்டிருப்பான். இந் நேரம் அங்கே விருந்து ஆரம்பமாகி யிருக்கும். ஒரு லாரி நிறைய காய்கறி, முப்பது மூட்டைப் பருப்பு, நாறு டின் நெய், குடம் குடமாகப் பால்!...ஆகா, அந்த விருந்துச் சாப்பாடு எப்படி யிருக்கும்?....சொக்கனின் நாவில் ஜலம் சொட்டியது. அவன் நினைவை விட்டு அந்தக் கல்யாண விருந்துச் சாப்பாட்டின் கற்பனை வடிவம் அகல மறுத்தது. அதை நினைக்க நினைக்க அவனுடைய பசி அதிகமாகியது. இந்த வேதனையை மறப்பதற்காக, டயர் துண்டை எடுத்து அறுப்பதில் கவனம் செலுத்தினன். கத்திதான் மழுங்கியது; அந்தப் பாழாய்ப் போன டயர் கொஞ்சங் கூட அறுபடவே இல்லே.

"தண்ணி வேணுமே! இப்பத் தெருக் குழாயிலே கூடத் தண்ணி நின்னுப் போயிருக்கும்" என்று முனகிக் கொண்டே எழுந்த சொக்கன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். அதோ, அங்கே புதிதாக எழும்பிக் கொண்டிருக்கும் கட்டடத்தண்டை ஒரு குழாய் இருப்பது தெரிந்தது. அங்கு போய்த் தண்ணீர் கொண்டுவரக் கிளம்பினன்.

சிமின்ட் பூசப்பெறாமல் அரைகுறையாக உருவாகி நின்றது அந்தக் கட்டடம். இன்று அங்கே வேலை நடக்கவில்லை. அக் கட்டடத்துக்குப் பின்னல்—பூந்தோட்டத்துக்கு நடுவில் ஒரு சிறிய மொட்டை மாடி வீடு இருந்தது. அதன் சொந்தக்காரர்கள்தான் இந்தப் பெரிய வீட்டைக் கட்டுகிறார்கள் போலும்!

புதிய கட்டடத்தின் முன் பக்கத்தில் மதில் சுவருக்கு ஓரமாகக் குழாய் இருந்தது. கேள்விக்குறிபோல் வளைந்திருந்த அதன் கைப்பிடியைப் பற்றி மேலும் கீழுமாக இரண்டு முறை அடித்தான் சொக்கன். தண்ணீர் வரவில்லை. அது பழுதாகி யிருக்கலாம்.

"இதுவும் நம்கு காட்டிடுச்சா?" என்று முனகிக் கொண்டே நிமிர்ந்த சொக்கனின் பார்வையில், அந்தக் கட்டடத்தின் சாரப் பலகையொன்றின்மேல் ஒரு பெரிய பீப்பாய் வைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. பீப்பாயி லிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அவன் யோசனை ஏதும் செய்யாமல் சாரக் கம்பங்களைப் பற்றி மளமளவென்று மேலே ஏறினன். பீப்பாயின் அருகில் நெருங்கிய சமயம் அவனுடைய பார்வை மற்றொரு பக்கம் திரும்பியது. அவன் அப்படியே சிறிது நேரம் அசையாமல் நின்றான்.

அந்தப் பீப்பாய்க்கு மேலே, நெடுக்கும் குறுக்குமாகக் கட்டப்பட்டிருந்த சாரக் கம்பங்களுக்கு இடையில், ஓர் ஆள் உயரத்துக்கு ஒரு 'திருஷ்டிப் பொம்மை' நிறுத்தி வைக்கப் பெற்றிருந்தது. சல்லாத் துணியில் வைக்கோல் பொதிந்து உருவாக்கப்பட்ட பொம்மை அது. காலும் கையும் நீள நீளமாக இருந்தன. ஒரு பானையில், கண், மூக்கு, வாய் முதலானவற்றைச் சுண்ணாம்புக் கோட்டால் எழுதி, 'முகத்தில்' கரும்புள்ளி செம்புள்ளி குத்தி, அந்தப் பொம்மையின் கழுத்தில் தலையாகப் பொருத்தப் பெற்றிருந்தது. பானைத் தலையில் வெள்ளைக்காரத் தொப்பிக்குப் பதிலாக, காங்கிரஸ் குல்லாய் அணிவிக்கப்பட்டிருந்தது. ஒருகால் அவ்வீட்டைக் கட்டுபவர் பெரிய காங்கிரஸ் பக்தராக இருக்கலாம். காரண காரிய அர்த்தங்களை மறக்க மறக்கத்தான் எது ஒன்றின் மீதும் பக்தி மிகுதிப்பட்டுக் கொண்டு போகும் போலும்! ஆனால், அந்தத் திருஷ்டிப் பொம்மைக்கு வெள்ளைக்காரனைப் போலக் கோட்டும் கால்சராயும்தான் அணிவிக்கப் பெற்றிருந்தன!

சொக்கன் அந்தப் பொம்மையையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். 'ஆகா! என்ன அழகான கோட்டு! கொஞ்சங்கூடக் கிழிசல் இல்லே! கால் சராயும் அப்படித்தான் பீத்தலின்றிச் சுத்தமாயிருக்கிறது! இவ்வளவு நல்ல கோட்டையும் கால் சராயையும் எப்படித்தான் மனம் வந்து இந்தத் திருஷ்டிப் பொம்மைக்கு மாட்டி வைத்திருக்கிறார்களோ!' ஆயிரக்கணக்கில் பணத்தைச் செலவிட்டு வீடு கட்டுகிறவர்களுக்கு இவை ஒரு பொருட்டல்ல என்பது அந்தப் புலேயச் சொக்கனுக்குப் புரியுமா என்ன? அவன் அந்தப் பொம்மையையே அதிசயத்துடன் பார்த்துக் கொண்டு நின்றான்.

'ஒரு லாரி நிறைய காய்கறி, முப்பது மூட்டைப் பருப்பு, நாறு டின் நெய், குடம் குடமாகப் பால்!... அடேயப்பா, அந்தக் கல்யாண விருந்துச் சாப்பாடு எப்படி யிருக்கும்? ஒன்றரைப் படி சோற்றை ஓர் ஆள் சாப்பிட்டு விடலாம்! அவ்வளவு ருசித்துக் கிடக்கும்! டீக்கடை நாயர் இந்நேரம் அப்படித்தான் சாப்பிட்டுக் கொண்டிருப்பான்! ஏனென்றால், அவன் லாண்டரியில் சலவை செய்த சட்டையும் கால் சராயும் அணிந்து கொண்டு போயிருக்கிறான்! நானும்..... நானும் அப்படிப் போனால் என்ன?'

வயிற்றில் மூண்டெரிந்த பசி என்னும் நெருப்பு சொக்கனின் மூளையை வெகு தீவிரமாக இயக்கி, அவனுள் இதுவரை ஏற்பட்டிராத அவ்வளவு பெரிய ஒரு துணிவை நெஞ்சிலே அறைந்து செருகியது. அவன் ஒரு முடிவுக்கு வந்தான். அந்த முடிவுக்கு மேல் எதையும் சிந்திக்க அவன் தயாராயில்லை.

ஐந்து நிமிஷங்கள் ஓடி மறைந்தன. இப்போது அந்த முற்றுப் பெறாத கட்டிடத்தின் சாரக் கம்பத்தில் இரண்டு திருஷ்டிப் பொம்மைகள் நின்று கொண்டிருந்தன. ஒன்று உடைகளைக் களைந்த கோலத்தில் வைக்கோல் பொம்மையாக நின்றது; இன்னென்று

கோட்டும் கால் சராயுமாக ஒரு விசித்திரத் தோற்றத்துடன் உயிர்ப்படைந்து சுற்று முற்றும் பார்த்தபடி மெள்ளக் கீழே இறங்கி வந்து கொண்டிருந்தது!

"வாங்கோ. வாங்கோ!" என்று இரண்டு கைகளையும் நீட்டி அன்புடன் வரவேற்றார் முகப்பு வாயிலில் நின்ற வரவேற்புக் குழுவினரில் ஒருவர். அவரும் ஒரு நடிகர் தான். கல்யாண வைபவத்துக்கு வரும் பிரமுகர்களை இந்த வகையில் வரவேற்க வேண்டும் என்பதற்காக அவர் ஏற்கனவே ஒத்திகை பார்த்திருக்க வேண்டும் — இல்லையானால் அவருடைய இந்த 'வரவேற்பு நடிப்பு' இத்தனை அற்புதமாக அமைந்திருக்க முடியாது!

சரிகைத் தொப்பியும், ஷேர்வானிக் கோட்டும் பஞ்சகச்ச வேட்டியுமாக ஒரு மார்வாரிப் பிரமுகர் காரிலிருந்து கம்பீரமாக இறங்கினார். அவருடன் கட்டான் வாயில் அணிந்த அம்மையார் ஒருவரும், நைலான் ஸாரி புனைந்த நாகரிக நங்கை ஒருத்தியும் வந்தனர். உடனே அவர்கள் தலைகளில் பன்னீர் மழை பொழிந்தது; புறங்கைகளில் சந்தனப் பூச்சு கமகமத்தது; மார்பில் புஷ்பச் செண்டு ஏறிக் கொண்டது. இதனால் திக்குமுக்காடிய அவர்கள் வரவேற்பாளர்களைப் பார்த்துப் புன்னகை பூத்தவாறு உள்ளே சென்றனர்.

இப்படிச் சென்ற அவர்களின் நிழலோடு நிழலாக இன்னொரு 'பிரமுகரும்' வந்தார். அவருடைய தோற்றத்தைப் பார்க்க ரொம்பவும் வேடிக்கையாக இருந்தது. தொள தொளப்பான பழுப்பு நிறக் கால்சராய்; நீல நிறக் கோட்டு — உள்ளே சட்டையோ பனியனோ இல்லை — தலையில் அழுக்கேறிய காந்திக் குல்லாய்; அவர் காலில் மட்டும் பளபளப்பான பூட்ஸ்!

யார் இந்தப் பிரமுகர்? ஒருகால் உள்ளே சென்ற மார்வாரிகளின் கார் டிரைவராக இருப்பாரோ? அப்படி எண்ணித்தான் வரவேற்புக் குழுவினர், எல்லோருக்கும் செய்யும் மரியாதைகளை அவருக்கும் செய்து உள்ளே அனுப்பி வைத்தனர்.

"போய்! போய்! பூந்துட்டான்! பூந்துட்டான்!" என்ற குரல்கள் சாலையில் குழுமி நின்ற ஜனங்களிடையே யிருந்து எழும்பின.

கோட்டும் கால் சராயுமாகத் தயங்கித் தயங்கிச் சென்று கொண்டிருந்த ஸ்ரீமான் சொக்கன் இந்தக் கூப்பாட்டைக் கேட்டுத் திடுக்கிட்டான். ஆனால் திரும்பிப் பார்க்காமல் அந்த சேட் தம்பதிக்குப் பின்னால் வெகு நாசூக்காக நடக்கலானான். நல்ல வேளையாக அவனைத் துரத்திக் கொண்டு யாரும் வரவில்லை.

உள் பந்தலின் முகப்பில் போய் நின்று மெள்ளப் பின்னால் திரும்பிப் பார்த்தான் சொக்கன். அவனை யாரும் கவனிப்பதாகத் தெரியவில்லை. ஆனால் முகப்பு வாயிலுக்கு வெளியே சாலையோரம் வளர்ந்து நின்ற மரக் கிளைகளில் ஏராளமான இளைஞர்கள் ஏறி உட்கார்ந்து அவனைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தனர். கல்யாணத்துக்கு வரும் நட்சத்திரங்களைக் கண் குளிரக் காணத் தான் அப்படி அவர்கள் அங்கே ஏறி அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். சொக்கன் அவர்களைச் சட்டை செய்யவில்லை. தான் அணிந்திருந்த ஆடைகளின் அழகைப் பார்த்துப் பார்த்து மனம் பூரித்தான். அவற்றைவிட அவனுடைய பூட்சுதான் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. நேற்று அந்த மைனர், ரிப்பேருக்குக் கொடுத்து விட்டுச் சென்ற பூட்சுகள் அவை! இதுவரை எத்தனையெத்தனையோ விதமான காலணிகளை அவன் தயாரித்திருந்தும் அவற்றில் ஒன்றைக்கூடத் தன் காலில் அணிந்து பூமியில் நடந்ததே இல்லை. இன்று அவற்றை அணிந்திருப்பது அவனுக்கு என்னவோ போலிருந்தது. கால்களில் ஒருவிதக் கூச்சம்; மனத்தில் ஒருவகை அச்சம். அப்போதைக்கப்போது சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டான். மீண்டும் ஒருமுறை தன் கால்களைக் குனிந்து நோக்கினான். அவனுடைய இடக்கால் கணுவில்— பூட்சுக்கு மேலே — இரும்புக் கம்பி வளையம் ஒன்று இருந்தது. சின்ன வயசில் காக்காய் வலிப்பு வந்து கொண்டிருந்ததால் அவன் அப்பன் இந்த இரும்புக் கம்பி வளையத்தைக் காலில் மாட்டி விட்டிருந்தான். அதை இன்றைய இந்தக் கோலத்தில் பார்க்க ரொம்பவும் வேடிக்கையாக இருந்தது. ஆனால் சொக்கன் அதுபற்றிக் கவலைப்படவில்லை. தான் அணிந்திருக்கும் கோட்டுக் கால்சராயை விட அந்தப் பூட்சுகளின் அழகையே வெகுவாக ரசித்தான். உலகத்தின் நாகரிக மெல்லாம் மனிதர்கள் அணியும் செருப்பிலும் ஷூக்களிலும்தான் இருக்கின்றன என்பது அவனுடைய அபிப்பிராயம். தான் இருக்கும் இந்த அழகிய கோலத்தைத் தன் அருமைக் குட்டி வேலம்மாள் பார்த்தால் எப்படிப் பூரித்துப் போவாள் என்று எண்ணிய அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். மனத்திலே உற்சாகம் கரை புரண்டது. கையில் வைத்திருந்த பூச்செண்டைக் காதில் செருகிக்கொண்டான். துண்டுப் பீடியைப் பாதியில் அணைத்துச் செருகிக்கொள்ளும் பழக்கம் அது!

"ஏன் சார், இங்கே நிற்கிறீர்கள்? வாங்க சார், ரெண்டாம் பந்தி ஆரம்பமாயிடுச்சு!" என்று அன்பும் பணிவுமாக ஒருவர் அழைத்ததைக் கேட்டுத் திடுக்கிட்ட சொக்கன் சட்டெனத் தன்னைச் சுதாரித்துக்கொண்டு, "ஹி, ஹி! அதுக்கென்னங்க; பரவாயில்லீங்க!" என்று உளறிக் கொண்டே அவர் பின்னால் சென்றான். அவனுடைய கால்கள் பயத்தால் ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு நடுங்கின. நெஞ்சு திக் திக்கென அடித்துக் கொண்டது. அத்துடன், 'அடடா! இவர்களெல்லாம் எவ்வளவு நல்லவர்களாக இருக்கிறார்கள்! எத்தனை அன்பும் மரியாதையும் பொழிகிறார்கள்!' என்று எண்ணி வியந்தும் கொண்டான். வியப்பு அதிகமாக ஆக அவனுக்கு அழுகையே வந்துவிடும் போலாகிவிட்டது.

கந்தர்வப் பட்டணம் போல் காட்சியளித்த அந்தப் பிரம்மாண்டமான பந்தலின் ஓரிடத்தில் உணவுப் பந்திக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நீள நீளமாக விரிக்கப் பெற்றிருந்த உண்ணக் கம்பளங்கள் கண்ணைப் பறித்தன.





## அந்த
## உல்லாச
## மாலை வேளைதனில்

நீங்கள் ராதா ஸில்க்
அணிந்திருக்கையில்
புதியதொரு எழிலுடன்
மாலை நேரம் முழுவதும்
காண்போர் வியக்கும்
கவர்ச்சியுடன் விளங்குகிறீர்கள்.

எழில்மிகு, ஈடு இணையற்ற
பட்டாடைகள்
ராதா ஸில்க்ஸ்.

உங்கள் தேவைகளுக்கு
எங்கள் ஷோருமில்
நிரம்பி இருக்கும்
பட்டாடைகளை பார்வையிடவும்.





# ராதா ஸில்க்ஸ்

''தன் பில்டிங்'', மவுண்ட் ரோடு, சென்னை-2.

# ராதா ஸில்க் எம்போரியம்

சன்னதி தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

RSE 921-T

# ஆதரவுடன் சீராட்டி
# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

நீங்கள் பெற்ற செல்வம்....அன்பு கனிந்த ஆதரவுக்கு அன்னை முகம் நோக்கும் ஆரமுது...அருமையிலும் அருமையான ஆதரவெல்லாம் அவனுக்கே உரிமையாகும்...பொன்னான அவனது ஆரோக்கியத்திற்கு ...... ஆஸ்டர்மில்க். ஏனெனில், தாய்ப்பாலுக்கு நிகரான ஆஸ்டர்மில்க், சிறு குழந்தைகளுக்கென்றே தயாரிக்கப் பட்டுள்ள தூய பாலுணவாகும்.



பாப்பாவின் பசியும் ஜீரண சக்திகேற்றவாறு பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது ஆஸ்டர்மில்க். மேலும், இரத்தசோகை ஏற்படாமல் பாதுகாப்பதற்கான அதிகப்படி அயச் சத்தும், தவிர வைட்டமின் 'டி'யும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன.

**தாய்ப் பாலுக்கு நிகரானது**

இலவசம்! 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலத்தில்)..குழந்தைப் பராமரிப்பு நூல். 50 ந. பைசாவிற்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க். தபால பெட்டி எண் 2420, சென்னை-2.

OS 6-50-M. TM



சென்னையில் பிரபல ஆடிட்டர் ஸ்ரீ சூரி அவர்களின் புதல்வர் டாக்டர் ராமச்சந்திரன் அமெரிக்காவில் இலினாய் சர்வகலாசாலையில் பி. எச்டி. ஆராய்ச்சிப் பட்டம் பெற்று வெற்றியுடன் இந்தியா திரும்பினார். அவரைச் சென்னை சென்டிரல் ரயில்வே நிலையத்தில் ஸ்ரீ சூரி குடும்பத்தினர் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்.

பட்டும் தங்கமும் வைரமுமாக ஜொலித்த பெரிய பெரிய மனிதர்கள் உற்சாகப் பெருமிதத்துடன் கும்பல் கும்பலாக நின்று உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய கவனமெல்லாம் அந்தப் பந்தலின் பிரமாதமான அலங்கரிப்பில் லயித்திருந்தது. ஆனால் சொக்கனின் பார்வையோ அங்கு நின்றிருந்தவர்களின் கால்களையே கூர்ந்து கவனிப்பதில் ஈடுபட்டது. அவன் எப்போதுமே மனிதர்களின் முகங்களைப் பார்ப்பதில்லை! அவர்களுடைய பாதங்களைத்தான் சிரத்தையுடன் கவனிப்பான். அது அவனுடைய தொழிலால் ஏற்பட்ட ஒரு பழக்கம்! அங்கு நின்றிருந்தவர்களில் பெரும்பாலோர் ரங்கோன் ஸ்லிப்பர்களே அணிந்திருந்தனர். விதம்விதமான நிறங்களில் விளங்கிய அவற்றைப் பார்க்கச் சொக்கனுக்கு மிகவும் எரிச்சலாக இருந்தது. இந்தப் புதிய வகை ரங்கோன் செருப்புக்களைக் கண்டாலே அவனுக்குக் கோபம் பற்றிக் கொண்டு வரும். காரணம், அவை வந்த பிறகுதான் தன் தொழில் மிகவும் க்ஷீணித்துவிட்டது என்பது அவன் அபிப்பிராயம். அந்தப் பாதரட்சைகள் சீக்கிரம் தேய்வதுமில்லை; அறுந்தால் தைக்க முடிவதுமில்லை. சொக்கனின் கோபம் நியாயம்தானே!

கல்யாண வீட்டார், விருந்தினர் ஒவ்வொருவரையும் வற்புறுத்தி அழைத்துப் போய்ப் பந்தியில் அமர்த்தலாயினர். தொலைவில் உணவு தயாராகிக்கொண்டிருக்கும் இடத்தை ஆவலுடன் பார்த்துக்கொண்டே பந்தி வரிசையில் போய் அமர்ந்தான் சொக்கன்.

அங்கு உட்கார்ந்திருந்த ஒவ்வொருவரையும் அன்புடன் குசலம் விசாரித்துக் கொண்டே, ஒரு பெரிய பரிவாரம் பின்தொடரக் கம்பீரமாக நடந்து வந்தான் மணப்பெண்ணின் மாமனான விமல்குமார். அவனை இதற்கு முன் எங்கோ பார்த்திருப்பது போன்ற ஞாபகம் சொக்கனுக்கு. ஆனால், எங்கே என்று தெரியவில்லை. ஒருகால், சுவரொட்டிப் படங்களில் பார்த்த நினைவாயிருக்கலாம். சின்ன வயசில் ஒரே ஒரு முறை அவன் ஒரு சினிமாப் படம் பார்த்திருக்கிறான். 'பக்த சேதா' என்ற படம் அது. அவனுடைய இனத்தைச் சேர்ந்த மகாபுருஷர் ஒருவரைப் பற்றிய படமானதால் அவன் அப்பன் அவனை அழைத்துக் கொண்டு போய்க் காட்டினான். அதன்பின் சினிமா என்ற ஒரு பெரிய உலகமே அவன் வரை இருண்டு விட்டது.

"மிஸ்டர் விமல்குமார்! நீங்க நடிச்சு வெளி வந்திருக்கிற 'வள்ளலார்' என்ற படத்தை நேத்திக்குப் பார்த்தேன். ஆகா, நான் என்ன சொல்லட்டும் போங்க! கல்யாண விருந்துக்கு வரும் ராமலிங்கப் பெருமான் தமது ஆடைகளைக் கழற்றிப் போட்டு, விருந்துச் சாப்பாட்டை அவை சாப்பிடும்படி தடியால் அடிக்கிறாரே, அந்தக் கட்டத்திலே உங்க நடிப்பைப் பார்த்து அப்படியே கண்ணாலே ஜலம் விட்டுட்டேன்!" என்று உணர்ச்சி வயப்பட்டுச் சொன்னார் ஒரு சமயோசித கலாரசிகர்.

"ஆமாங்க பிரதர்! ஆனால் அது வெறும் நடிப்புன்னு நினைக்கிறீங்க? என் பழைய அநுபவத்தின் 'ரியாக்ஷன்' அல்லவா அது?" என்று கூறிக் கலகலவென நகைத்தான் விமல்குமார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த சொக்கனுக்கு உள்ளூற உதறலெடுத்து விட்டது. தன்னைப் பற்றித்தான் அவர்கள் பூடகமாக இப்படிப் பேசிக் கொள்கிறார்களோ என்று நினைத்து நடுங்கியவனாய்த் தன் இடது காலில் தெரிந்த இரும்பு வளையத்தைக் கால் சராய்க்குள் மறைத்துக் கொண்டான்.

சீட்டுக் கட்டாக வாழை இலைகள் வந்தன. எல்லாம் தலைவாழை இலைகள். யந்திரகதியில் ஒருவன் இலைகளைப் போட்டுக் கொண்டே

போனான். பந்தி வரிசையின் முனையில் அண்டாக்கள் வந்து இறங்கின. கழுத்தை நீட்டி அவற்றை ஆவலுடன் நோக்கினான் சொக்கன். தும்பை மலர்களைப் பறித்துக் குவித்தாற் போன்று சிரகச்சம்பா அரிசிச்சோறு ஒவ்வோர் அண்டாவிலும் இருந்தன. அப்புறம் சாம்பார் அண்டா வந்தது. அதன் பின் ஐம்பது வகைக்கும் மேற்பட்ட கறி பதார்த்தங்கள் தட்டுத் தட்டாக வந்து குவிந்தன. அப்புறம் லட்டுக் கூடை, மாம்பழக் கூடை, வடைத்தட்டு, பாயச தேக்சாக்கள்! இவற்றை யெல்லாம் பார்த்த சொக்கன் மிரண்டு போனான். விலா எலும்புகளை முன்னுக்குத் தள்ளிவிட்டு உள்ளே அழுந்திக் கிடந்த அவன் வயிறு நாபிக் கொடியோடு நெளிந்து விரிய ஆரம்பித்தது.

“என்னங்க சார்! புது வீடு கட்டீங்களாமே, எப்போ கிரகப் பிரவேசம்?” என்று இனித்த குரலில் கேட்டுக் கொண்டே ஒரு பெரிய மனிதரை அழைத்து வந்தான் விமல்குமார்.

“கட்டு வேலையெல்லாம் முடிஞ்சு போச்சுங்க. பூச்சு வேலை ஒண்ணுதான் பாக்கி. சிமிண்டு கிடைக்காம திண்டாடறேன். அதுக்குத்தான் ஒரு வாரமா வேலையை நிறுத்தி வைச்சிருக்கேன்!” என்று அமர்த்தலாகச் சொல்லிக்கொண்டு வந்தார் அவர்.

“மிஸ்டர், தயவு செய்து கொஞ்சம் நகர்ந்து உட்காரீங்களா? பிளீஸ்!” என்று சொக்கனைப் பார்த்து வேண்டினான் விமல்குமார். இதுவரை சோற்று அண்டாக்களைத் தன்னை மறந்து பார்த்துக் கொண்டிருந்த சொக்கன், “ஹி, ஹி! அதுக்கென்னங்க? தாராளமா!” என்றவாறு அரக்கி அரக்கிச் சற்றே நகர்ந்தான். பெரியவரை அவன் பக்கத்தில் உட்கார வைத்து விட்டுப் போனான் விமல்குமார். சொக்கனின் பார்வை மீண்டும் சோற்று அண்டாக்களின் பக்கம் திரும்பியது.

உணவு வகைகளெல்லாம் வந்து சேர்ந்ததும் எங்கேயிருந்தோ பத்துப் பதினைந்து பெண்கள் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். தேவலோகத்துக் கன்னிகைகள் போல் காட்சியளித்த அவர்கள் அவ்வளவு பேரும் பிரபல நட்சத்திர நடிகைகள்! அவர்கள்தாம் இந்தப் பந்திக்கு உணவு பரிமாறப் போகிறார்கள்!

முன்றானையை இழுத்துச் செருகிக்கொண்டு, ஆளுக்கொரு தட்டாக ஏந்தி அன்ன நடை நடந்து கொண்டு பரிமாற ஆரம்பித்தனர். இதைத் தொலைவிலிருந்து பார்க்கும்போது ஏதோ ஒரு புதுவிதமான குரூப்-டான்ஸ் ஆடுவது போல் இருந்தது!

ஆகா, என்ன பணிவு! என்ன குழைவு! எவ்வளவு அடக்கம்! எத்தனை வெட்கம்! ‘நாங்கள் வெறும் நடிகைகள் மட்டுமல்ல; குடும்பப் பெண்களும் கூடத்தான்’ என்பதை அங்கு வந்திருந்த விருந்தினர் அவ்வளவு பேருக்கும் எப்படியும் இன்று நிரூபித்து விட வேண்டும் என்று அந்த ஒவ்வொரு நட்சத்திர நடிகையும் தீவிர வைராக்கியம் செய்து கொண்டு வந்திருப்பது போல் தோன்றியது அந்தக் காட்சி! இதன் முன்னேற்பாட்டினால்தானோ என்னவோ, மூலைக்கு மூலையிருந்து போட்டோ காமிராக்கள் ‘கிளிக்’ ஒலிகளை எழுப்பின!

சொக்கனின் இலையில் ஒரு பெரிய மாம்பழமும் வந்து விழுந்தது. அப்புறம் விளாம்பழ அளவுள்ள இரண்டு லட்டுகள். அதன் பின் ஏதேதோ கூட்டு வகையறாக்கள், அவியல், பொரியல், வறுவல், திருகல், இத்தியாதி, இத்தியாதி!...அப்புறம் கம்மென்று மணம் வீசும் சோறு!

அன்னக்கரண்டியும் சோற்றுத் தட்டுமாக அவன் எதிரில் வந்து குனிந்து நின்ற நடிகை சற்றே வியப்படைந்தவள் மாதிரி அவனை ஓரக் கண்ணால் பார்த்தாள். எந்த ஹாஸ்ய நடிகனாவது ஷூட்டிங் முடிந்து ‘மேக்-கப்’பைக் கலைக்காமல் நேரே இங்கு வந்து விட்டிருக்கிறானோ என்று சந்தேகப்பட்டே அவனை அப்படிப் பார்த்தாள். அது அவள் தவறல்ல. சொக்கனின் ஆடையலங்காரத்தைப் பார்க்கும் யாருக்கும் அப்படித்தான் தோன்றும்!

‘என்ன இவள் சோற்றைப் போடாமல் நம் முகத்தைப் பார்க்கிறாளே’ என்று எரிச்சல் வந்தது சொக்கனுக்கு. உடனே, ‘நம்மை இன்னாரென்று தெரிந்து கொண்டு சோறு போடாமல் போய்விடுவாளோ’ என்று பயந்து விட்டான். நல்ல வேளையாக அப்படி யொன்றும் நடைபெறவில்லை. சொக்கனின் இலை நிறையச் சோறு சரிந்து நிறைந்தது. அதைப் பார்த்ததும் அவனது வலக் கை விரல்கள் நிலை கொள்ளாமல் துடித்தன.

ஆனால், பந்தியில் உட்கார்ந்திருந்த யாருமே தம் எதிரிலுள்ள இலையில் கவனம் செலுத்தினதாகத் தெரியவில்லை. அனைவருடைய பார்வையும், அங்கு உணவு பரிமாறும் நடிகைகளின் மீதே மொய்த்துக் கொண்டிருந்தது.

‘பைத்தியக்கார மனுஷனுங்க! எதுக்கு இவங்களெல்லாம் இலையைப் பார்க்காமல் அந்தப் பொண்ணுகளை இப்படி மொச்சிப் பார்த்துக்கிட்டு இருக்கிறாங்க? அவளுங்க மூஞ்சியிலே அப்படி என்ன இருக்கு? பார்க்கப் போனா, இந்த மாம்பழத்தை விடவா அந்தப் பொண்ணுகளோட கன்னம் அழகா யிருக்கு? ஆகா, இந்த ஒரு லட்டுக்கு ஈடாவுமா அவள் மூக்கு? சே, இந்தப் பொண்ணுகள் எல்லாருமே எதுக்கு இப்படிக் கன்னத்திலே ஒரு கரும்புள்ளி குத்திக்கிட்டு இருக்கிறாங்க? திருஷ்டிப் புள்ளின்னு சொல்லுவாங்களே, அதுவா? ஐய்ய, பார்க்கச் சகிக்கலே! இந்த மாம்பழத்துக்கும் லட்டுக்கும் திருஷ்டிப் புள்ளி குத்தினாலும் ஞாயம்னு சொல்லலாம்; இவங்களுக்கு எதுக்கு?’ தனக்குள் இவ்வாறு முனகிக் கொண்டான் சொக்கன்.

இலையிலுள்ள உணவு வகைகளைப் பார்க்கப் பார்க்க அவனுக்குத் தாள முடியாத குதூகலம் நெஞ்சை முட்டியது. அத்துடன், இன்று மாலை தனக்குத் திருமணம் நடக்க விருப்பதையும் நினைத்துக் கொண்டான். தன் திருமணத்துக்காகவே இந்த விருந்து நடப்பது போலவும், தானே இந்தக் கல்யாணத்தின் மாப்பிள்ளை என்பது போலவுமான ஒரு மிடுக்கு இப்போது அவனிடம் குடியேறியது.

இப்படி இருந்தவனின் முகத்தில் திடீரென்று ஒரு வாட்டம். கண்கள் கலங்கின. அழுவது போல் தாடைகள் உப்பி, உதடுகள் நெளிந்

தன. தன் மனைவி வேலம்மாளை எண்ணியே கண் கலங்கினன். அவளும் இப்போது இங்கே இருந்தால்?......நெஞ்சு தும்ம முட்டிக் கொண்டு நீண்டதொரு பெருமூச்சு வெளிப்பட்டது! அத்துடன் அவனது மனத்தில் ஓர் ஆசையும் முளைத்தது. 'இலையிலிருக்கும் இத்தனை வகைகளிலும் கொஞ்சம் கொஞ்சம் எடுத்துத் தன் கோட்டு ஜேபிகளில் போட்டுக் கொண்டு போய் அவளுக்குக் கொடுத்தால் என்ன?' என்று எண்ணினன். உடனே, 'ஊஹூம்! யாராவது பார்த்து விட்டால், குட்டு உடைந்துவிடும். உள்ளதுக்கே மோசம் வந்துவிடும்' என்ற பயம் பிறந்தது. 'பரவாயில்லை; இந்த மாம்பழத்தையும் லட்டையும் மட்டும் எப்படியாவது மறைத்து எடுத்துக் கொண்டுபோய் அவளுக்குக் கொடுத்துவிடலாம்' என்று உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டான்.

சொக்கனின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெரிய மனிதர் ஏனே மெல்லக் கனைத்தார். சொக்கன் அலட்சியமாகத் திரும்பி அவரை ஓரக் கண்ணுல் பார்த்தான். அவர் அவனேயே உற்று நோக்கினர். தொலேவிலே வந்து கொண்டிருந்த சாம்பாரின் மணம் அவனேக் காந்தம்போல் கவரவே அவசரமாக அந்தப் பெரியவர் சடாரென்று எழுந்து பந்தியை விட்டு எங்கோ விரைந்து போவதைக் கூட அவன் கவனிக்கவில்லை.

அப்பாடா! ஒரு பெரிய கரண்டி நிறைய மாயவரம் நெய் மணத்துக்கொண்டு சொக்கனின் இலையில் வழிந்தது. அப்புறம் சாம்பார் வாய்க்காலெடுத்தது.

அவ்வளவுதான். சொக்கன் தன்னை மறந்தான். உலகத்தை மறந்தான். இலையில் இருந்த அவ்வளவையும் ஒன்ருகச் சேர்த்துக் கூட்டிப் பிசைந்து கை நிறைய அள்ளியதை ஒரு பெரிய உருண்டையாக உருட்டி, அவ்வுருண்டைக்கு ஏற்பத் தன் வாயைப் பெரிதாகத் திறந்து கையை மேலே உயர்த்தினன்.

மறு கணம், சொக்கனின் தொண்டையில் ஏதோ ஓர் அடைப்பு! கையில் எடுத்த சோற்றுருண்டை கையில்தான் இருக்கிறது; இன்னும் வாய்க்கு நெருங்கவில்லை. ஆனலும் தொண்டையில் ஏதோ அடைத்துக் கொண்டது போன்ற மூச்சுத் திணறல். திக்குமுக்காடிய சொக்கன் நிமிர்ந்து நிமிர்ந்தான்.

"அயோக்கிய ராஸ்கல்! திருஷ்டிப் பொம்மைக்குப் போட்டு வெச்சிருந்த கோட்டையும் பேண்டையும் திருடி ஜம்பமா போட்டுக்கிட்டு இங்கே விருந்துக்கு வந்துட்டியா விருந்துக்கு? நடடா, ஸ்டேஷனுக்கு!" என்று இடி போன்ற குரலில் கர்ஜித்துக்கொண்டே சொக்கனின் கழுத்துப் பிடரியை இறுகப் பற்றி மேலே தூக்கிய ஒரு போலீஸ் ஜவான், அவனே அந்தப் பந்தலை விட்டு அப்பால் நெட்டித் தள்ளிக்கொண்டு போனன். வெளியே சென்று போலீஸ் ஜவானை அழைத்துக்கொண்டு வந்த அந்தப் பெரிய மனிதர் இலையின் எதிரில் நிம்மதியாக உட்கார்ந்தார்.

சொக்கன் தன் இலைச் சோற்றைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்ருன். என்ன செய்வது? ஒரு வேளை உணவை வயிரார உண்ண விரும்பிய அவனைப் பார்த்து உலகம் திருஷ்டிப்பட்டு விட்டதோ?

---



# அஞ்சறைப்



கனடா தேசத்தின் வெளி விவகாரப் பொறுப்புக்களை வகித்துவந்த லெஸ்டர் பி. பியர்ஸன் இளைஞராக இருந்தபோது ஆர்மர் அண்டு கம்பெனி (Armour & Co.) ஸ்தாபனத்தில் வேலை பார்த்து வந்தார். இந்த ஸ்தாபனம் புலாலைப் புசிப்பதற்கு ஏற்றவாறு பதப்படுத்தி, அழகாகக் காகிதத்தில் சுற்றி, நாடு முழுதும் விற்பனை செய்தது. பிற்காலத்தில் ஒருமுறை சிக்காகோவில் பியர்ஸன் தாம் 'ஆர்மர் அண்டு கம்பெனி'யில் வேலை பார்த்து வந்ததாகக் குறிப்பிட்டார்.

இதனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள் ரஷ்ய அரசியல் நிபுணர்கள். பியர்ஸன் யுத்த கோஷம் செய்கிறார் என்றும் ஆர்மர் அண்டு கம்பெனியில் தமக்குச் சம்பந்தம் உண்டு என்று அவர் கூறியதிலிருந்தே இது தெளிவாகிறது என்றும் கூப்பாடு போட்டார்கள்.

'ஆர்மர்' என்ற சொல்லுக்குக் 'கவசம்' என்று பொருள். ஆகவே மாமிசம் விற்பனை செய்யும் கம்பெனியைப் போர்த் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ஸ்தாபனமாக ருஷ்யர்கள் கருதி விட்டதில் வியப்பென்ன?



"ராமு ரொம்பக் கெட்டுப்போய் விட்டானப்பா. எதற்கெடுத்தாலும் அவன் 'பெட்' கட்டுகிறான். எப்போதுதான் திருந்தப் போகிறானோ?" என்று ரொம்பவும் வருத்தப்பட்டுக் கொண்டான் சீனு.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு அகஸ்மாத்தாக ராமுவைச் சந்தித்தபோது அந்தக் கொடிய பழக்கத்தை விட்டுத் தொலைக்குமாறு கேட்டுக் கொண்டேன்.

"அது மட்டும் முடியாத காரியம். இதோ பார், 'உன் பர்ஸில் நூறு ரூபாய் இருக்கிறது' என்று பத்து ரூபாய் பந்தயம் கட்டத் தயார் நான்!" என்றான் ராமு.

ராமு நன்றாக ஏமாந்தான் என்று சந்தோஷத்துடன் நினைத்துக் கொண்டேன். இன்று ஒரேயடியாகப் பத்து ரூபாய் நஷ்டமானாலும்



பெற்ற பிள்ளையைப் பாராட்டி வளர்க்கும் தாய் போல் நிலத்தில் வளரும் பயிர்களை நீரூட்டி வளர்ப்பது நதியாகும். வருபுனல் என்று வள்ளுவர் குறித்த நதிகளை அருமையாகப் போற்றினர் தமிழ் மக்கள்; சிறிய நதிகளுக்கும் சிறந்த பெயரிட்டனர். தொண்டை நாட்டிலுள்ளது பாலாறு; பாண்டி நாட்டிலுள்ளது தேனாறு; சேர நாட்டிலே நெய்யாறு உண்டு. பாலாறு என்று பெயர் பெற்ற ஆற்றிலே நீர் சுரக்கும். தேனாற்றிலே நீர் சொட்டும். நெய்யாற்றிலே நீர் துளிக்கும். பாலையும் தேனையும் நெய்யையும் அளவறிந்து ஊட்டிப் பிள்ளையைப் பேணி வளர்க்கும் தாய்போல் ஊற்றுப் பெருக்கால் நிலத்துக்கு நீரூட்டி நலம் பயக்கும் நதிகளை நல்ல பெயரிட்டு அழைத்தனர் நன்றி மிக்க தமிழ் நாட்டார்.

—சொல்லின் செல்வர்

# வெட்டி





"பள்ளிக்கூடத்தின் தலையில் இலை வை" என்று அடிக்கடி சொல்லி வந்ததால்தானே என்னவோ, குழந்தைகளுக்கு டி. கே. சி. யிடம் அபாரப் பிரேமை. சென்னையில் சில நாட்கள் தங்கிவிட்டு அவர் குற்றாலம் திரும்புகையில் ஒரு சிறுமி வருத்தத்துடன் கேட்டாள்: "ஏன் மாமா இவ்வளவு சீக்கிரமாகத் திரும்பிப் போகிறீர்கள்?" என்று.

"இது தெரியாதா உனக்கு?" என்றார் டி. கே. சி. ஆச்சரியப்படுவது போன்ற பாவனையுடன். "திரும்பி வருவதற்குத்தான் போகிறேன்!" என்று கூறிவிட்டுக் குழந்தை போலச் சிரித்தார்.

அதைக் கேட்டதும் அந்தச் சிறுமி திருப்தியடைந்து விளையாடப் போய்விட்டாள். சுற்றியிருந்த பெரியவர்களோ சிந்திக்கத் தொடங்கினார்கள்.



அப்புறம் பந்தயம் கட்டும் பழக்கத்தையே விட்டுத் தொலைப்பான் என்று கருதி பர்ஸை எடுத்துக் கொடுத்தேன். பத்தறு சில்லறையை எண்ணிப் பார்த்து விட்டுப் பரிதாபத்துடன் பத்து ரூபாயைப் பறி கொடுத்து விட்டுப் போனான் ராமு.

மறுநாள் நடந்ததையெல்லாம் சீனுவிடம் கூறினேன். "இனிமேல் ராமு பந்தயம் கட்டும் பழக்கத்தையே விட்டு விடுவான் பார்!" என்றேன் பெருமையாக.

"அடப் பாவி! 'கெட்ட பழக்கம் எதுவுமே இல்லாத உன்னையே 'பெட்' கட்டச் செய்ய முடியும்!' என்று என்னிடம் மார்தட்டி இருபது ரூபாய் பந்தயம் கட்டியிருக்கானேடா!" என்று அலறினான் சீனு.



எதிர்பாராத விபத்துக்களாலோ அல்லது தீப்புண்களாலோ உடலின் ஒரு பகுதி மேல் தோலை இழந்து விகாரமாகிவிட்டால் அதனைச் சீர்ப்படுத்த ஒட்டுப்போடுகிறார்கள், தற்காலத்தில் சஸ்திர சிகிச்சை நிபுணர்கள்.

காயமுற்ற நபருடைய உடலிலிருந்தே ஆரோக்கியமான பகுதியிலிருந்து தோலை உரித்தெடுத்து அதனைப் புண்பட்ட இடத்தில் வைத்துத் தைத்து அழுத்தமான கட்டுப் போடுகிறார்கள். சில நாட்களில் அது நன்றாக இணைசேர்ந்து விடுகிறது. புண் இருந்த இடமே தெரியாது. தோல் உரித்தெடுக்கப்பட்ட பகுதியிலும் முன்போலவே ஆரோக்கியமான மேல் தோல் வளர்ந்து விடுகிறது.

ஆனால் வேறு ஒரு நபர் தமது தோலைத் தானம் கொடுத்தால் அது நோயாளியின் உடலில் ஒட்டி வளருவதில்லை!




ஏஇஐ மைத்தான் ஏ.ஸி.ஸீலிங்
விசிறிகள்

| | முன் | இன்றை |
|---|---|---|
| 36″ | ரூ. 165.00 | ரூ. 160.00 |
| 48″ | ,, 190.00 | ,, 181.00 |
| 56″ | ,, 205.00 | ,, 199.00 |
| 60″ | ,, 220.00 | ,, 210.00 |

AEI ஏஇஐ விசிறிகள்

மிக குறைந்த சிலவில் அதிக சுகத்தை அளிக்கும்



மாஸ்டா பல்புகள் நீண்ட காலம் அதிக ப்ரகாசத்தை
கொடுக்குமென்று ஞாபகமிருக்கட்டும்

விபரங்களுக்கு:

அஸோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்டீரீஸ்
(இந்தியா) பிரைவேட் லிமிடெட்

கிளைகள்:

த.பெ. 271 கல்கத்தா-1 • த.பெ. 484 பம்பாய்-1 • த.பெ. 2710 மதராஸ்-2
த.பெ. 345 புது டில்லி-1 • த.பெ. 581 பங்களூர்-2 • த.பெ. 50 கோயம்பத்தூர்

த.பெ. 59, காகபூர்-1

AEI-143 TM

# கஞ்சமலையின் காதல்

துரோணன்



எந்தத் தொழிலுக்கும் போட்டி ஏற்பட்டாலும், கஞ்சமலையின் தொழிலுக்குப் போட்டி ஏற்படாது! அவன் ஒரு வகையான சுமை தூக்கிதான். தலை மேல் அரை மணங்கு எடை, தோளில் ஒரு பளு எடை; இது தவிர கக்கத்து வட்டக் கூடைக்குள் இரண்டு வீசை எடை—இவ்வளவு உயிர்ப் பாரத்தையும் சுமந்துவந்து தொழில் நடத்துபவன் கஞ்சமலை. அவன் தலையெழுத்து அப்படி! வெயிலோ, கானலோ, அடை மழையோ எதுவாக இருந்தாலும் அவனுக்கு அலுப்பு சலிப்பு ஏற்பட்டதில்லை. ஏன், அவனுக்குத் தன் தொழில் மீதே ஒருவிதப் பெருமையுமுண்டு. அவனொரு பாம்புப் பிடாரன்; பாம்பாட்டித் திருமகன்!

காலை எட்டு மணி சுமாருக்கெல்லாம் நகரத்து வீதிக்குள் நுழைவான். ஒவ்வொரு தெருவிலுமுள்ள சிறுவர், சிறுமியர் கூட்டமும் அவனை மொய்த்துக் கொண்டு விடும். யானைத் துதிக்கையைப் போல் அவனுடைய தோளில் கிடந்து உழன்றுகொண்டிருக்கும் கண்ணாடி மொந்தை விரியலைக் காண்பவருக்கெல்லாம் கொஞ்சம் குலை நடுக்கம்தான் ஏற்படும். அதை அவன் அநாயாசமாகத் தூக்கி, அங்க வஸ்திரம் புரட்டிக் கொள்வது போன்று தோள் மாற்றிக் கொள்ளுவான். அவனுக்கே தனிமையானவொரு சாரீரம். தனி ராகம்! 'யே நாகம்மா....நாகம்மா...புர்ர்...யோ' என்ற சீட்டிக் குரலில் முழக்கியபடி வீட்டுக் குறட்டோரத்தில் அமர்ந்து கொள்ளுவான். கழுத்தில் சுழலும் மொந்தைக்குச் சிறிதுநேரம் விடுதலை. அது கீழிறங்கித் தரையில் ஊர்வது போல் நகரும். கைக் கூடைக்குள்தான் எத்தனை சரக்குகள்! குட்டையாகவொன்று, கூழையாகவொன்று, பச்சையாகவொன்று - மூன்று ரகங்கள்! கடைசியாகத் தலைப் பெட்டியையும் இறக்கி விட்டு மகுடியைக் கையில் எடுத்துக் கொள்ளுவான். அந்தப் பெரியவர் அவன் கட்டளைப்படியெல்லாம் ஆடியாடிச் சீறி ஓய்வார். இவற்றைக் கண்டு அக்கம் பக்கம் போகிறவர்களெல்லாம்கூட அங்கே வந்து சேருவார்கள். வீட்டுக்கார அம்மாளோ, ஐயாவோ வழங்கும் கால் படி அரிசியை வாங்கி ஜோல்னாப் பைக்குள் நிரப்பிக் கொண்டு படி இறங்குவான்.

கஞ்சமலைக்கு இது அன்றாட வாழ்க்கை. சாயந்திரம் வீடு திரும்புகையில், பட்டணம் படியளவுக்குக் குறைவில்லாத அரிசியும், ஒரு ரூபாய்க் காசுகளும் தேறிவிடும். மூன்று வருஷங்கள் முன், பதினெட்டு வயதுக்கெல்லாம் ஆரம்பித்த தொழில் இது.

கொள்ளிடக்கரை ஓரத்தில், பனை ஓலையால் அமைத்த ஒரு தனித்த குடிசை. அந்தக் குடிசைக்குள் ஐந்தாறு ஜீவன்கள் இருந்தாலும், பெரிய உருவங்கள் மூன்றுதாம். கஞ்சமலைக்குப் பாட்டன் ஒருவன். மாமன் மகள் செவங்கி ஒருத்தி. இவனொருவன். பாக்கி மூன்றும் மூன்று உழக்குகள்—அவனுக்குத் தம்பி, தங்கைகள். அவனது அப்பன்தான் ஒரு வழியாகப் பாம்புக்கே இரையாகிப் போய் விட்டான். ஆயிக்காரியாவது இருந்து இவர்களையெல்லாம் ஆதரிக்கக் கூடாதா? எல்லாப் பொறுப்புக்களையும் கஞ்சமலையின் தலையிலே கட்டி விட்டு, அவளும்பிரசவித்த மூன்றும் நாளே மண்டையைப் போட்டுவிட்டாள். இப்போது தாய் வழிப் பாட்டனான கருவியாண்டிதான் இந்தக் குடும்பத்தின் முதியவன். அவனுக்கும் வயசானதின் காரணமோ, அல்லது வாழ்வின் வெறுப்பாலோ கஞ்சமலையின் மீது துளிக்கூடப் பாசமில்லை. ஏதோ அன்றாடம் அவன் கொண்டு வரும் வருமானத்தையேற்று, சோறாக்கி, கூழாக்கிப் போட்டு வந்தானே தவிர, கஞ்சமலையை ஒரு பஞ்சைப் பேராகத்தான் மதித்தான். ஆனால் இதே நிலையிலுள்ள பேத்தி செவங்கியைப் பற்றியோ?

செவங்கியும் சிறு வயதிலேயே அப்பனையும், ஆயியையும் உருட்டி விட்டிருந்தவள்தான். அவளும் இந்தப் பாட்டனுக்கொரு பாரம் தான். ஆறு பேர்களிடையே ஒருத்தியாக வாழும் செவங்கி ஏதாவது மிச்ச மீதி விருந்து உண்ணுவாளோ, மாட்டாளோ, பாட்டனின் பரிவாலும், பாசத்தாலும், 'பள பள'வென்று வளர்ந்து, பதினெட்டு வயதுக் கட்டிளங்குமரியாகத் திகழ்ந்தாள்.

கருவியாண்டி இயற்கையிலேயே ஒரு பேராசைக்காரன். ஆதி நாளில் அவன் அடித்திருந்த அடாபிடித்தனம் எவ்வளவோ இருந்திருக்க வேண்டும்! எங்கேயானும் போய்த் திருடியாவது காசு பணம் சேர்க்க வேண்டும் என்பது அவனது கொள்கை. அத்தகைய கருத்துக்குத் தகுந்தாற் போல் இப்போதும் செய்யக் கூடியவன்தான். மனம் போனபடி செய்ய முடியாது. உடலுக்கு வயதாகி விட்டதே! குடிசை வாசலிலேயே உட்கார்ந்து கோரைப்பாய் முடைவதுடன் அடங்கிக் கிடந்தான். அதில் தேறக்கூடிய சிறு தொகையை ஜாதிக்காய்ப் பெட்டியில் போட்டுக் கண்ணும் கருத்துமாகக் காத்து வந்தான். தனக்குப் பிற்காலம் இந்தக் குடும்பம் எப்படி விருக்க வேண்டுமென்பதைப் பற்றி அவன் சிந்திக்கும் போதெல்லாம் செவங்கியைப் பற்றின ஆசைகள்தாம் எல்லாவற்றையும் அமுக்கி

விட்டு அவனது மனத்தின் மேலே மிதந்து நிற்கும். 'அவளை இந்தத் துடை காலிப் பயல் கஞ்சமலைக்கா முடித்து வைப்பது? முறை மைக்காரன்தான். இருந்தாலும்?' செவங்கி யின் அழகைக் கண்டு 'நான், நீ' யென்று போட்டி போட்டுக்கொண்டு வரப்போகும் காளைகள் எவ்வளவோ பேர்களுண்டு என்பது அவனது அபிப்பிராயம்.

கிழவனின் எண்ணங்களை யொட்டிய அவனது பிரார்த்தனையாலோ அல்லது செவங்கியின் அதிஷ்டந்தானே என்னவோ-ஒரு நாடோடி சர்க்கஸ் கம்பெனி ஊருக்கு வந்து சேர்ந்திருந்தது. அந்தக் கம்பெனியில் கூலிக்கு நடிக்கும் ஒரு குடும்பம் கொள்ளிடக்கரையை ஒட்டிய பரிசல் துறையோரத்தில் முகாம் போட்டிருந்தது. பகல் முழுதும் அங்கே கூத்தும் பாட்டும் தான். மாலை நான்கு மணிக்கெல்லாம் ஊருக்குள் உள்ள சர்க்கஸ் கூடாரத்துக்கு எல்லாம் சென்றுவிடும்.

அந்தக் குட்டி சர்க்கஸின் பிரதான நடிகன் குருவாடி. நல்ல வாட்டசாட்டமான வடிவழும், களையும் காத்திரமுமாக இருந்த அவன் மீது, காண்பவருக்கெல்லாம் பற்றுதல் விழுந்து விடும். உயரே கட்டியுள்ள ஒற்றைக் கம்பியின் மீது கைத்திவட்டியுடன் ஆடுவது, ஓடுவது, பார் விளையாடுவது, கனமான கருங் கல்களைத் தன்மேல் ஏற்றிக் கொள்ளுவது போன்ற செயல்களை யெல்லாம் செய்வதன் மூலம், வைரம் பாய்ந்த கட்டையாக இருந்தான் குருவாடி. கொள்ளிடக்கரை முகாமில் ஒருவனாக எந்த வேளையில் வந்து சேர்ந்தானே — அப்போதே கருளியாண்டியின் கவனத்திலும் அவன் பதிந்து விட்டான்.

★

ஒருநாள் வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே வீடு திரும்பியிருந்தான் கஞ்சமலை. அவன் அப்படி வருவான் என்பது தெரியாததால்தான் கிழவனும் அப்போது அங்கில்லை. மற்றைய வாண்டுகளும் தோப்புக்குள் இலந்தைப்பழம் பொறுக்கப் போயிருந்தன. குடிசைக்குள் நுழைந்த கஞ்சமலை, மிகுந்த பரபரப்புடன், "செவங்கி, செவங்கி - இங்கே வாயேன்-" என்றான் தணிந்த குரலும் ஆர்வமுமாக. சற்றுத் தூரத்துக்கப்பால் ஜாடையாக ஒதுங்கியிருந்த செவங்கி அருகே அணுகினாள்.

"இந்தா, இதெல்லாம் ஒனக்குப் புடிக்குமா இல்லையா?" எனக் கூறிக்கொண்டே பைக்குள் கையை விட்டு, நாலைந்து கரளை கரும்புத் துண்டங்களையும் பத்து வெள்ளரிப் பிஞ்சுகளையும் வெளியிலெடுத்து நீட்டினான். செவங்கியின் முகம் இலேசாக மலர்ந்தது. ஆனாலும் வகையறியாப் பீதியும் திகிலுமாக நாலாபுறங்களையும் பார்த்துக்கொண்டாள். சுவரோரத்திலிருந்த கூடையை யெடுத்து வந்து அவன் சமீபம் வைத்தாள். அவன் அவற்றை அதில் போட்டுவிட்டு, மீண்டும் அசட்டுப் பார்வையுடன் பைக்குள் கையை விட்டுக் கொண்டான். "இன்னொரு சாமான் ஒனக்குன்னு கொண்டாந்திருக்கேன். என்னான்னு சொல்லுவியா?" என்றான் கொஞ்சலான குரலில்.

செவங்கி நாணமும் ஆவலும் நிறைந்த பார்வையை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள். ஆனால் அவன் கையிலெடுத்திருந்த பொருளைக் கண்டதும் விரைந்து வந்து, அதை அப்படியே வெடுக்கெனப் பறித்துக் கொண்டு வெளியே ஓடிவிட்டாள்! அது சந்தையிலிருந்து அவன் வாங்கி வந்திருந்த மணம் மிகுந்த மரிக்கொழுந்துக் கத்தை.

கஞ்சமலை உடல் புல்லரிக்க நின்றான்!

இப்படியொரு சம்பவம் நடந்த மறு தினமே கிழவனுக்கு ஏதாவது குறளி ஜோசியம் தெரியுமோ என்னவோ, அவனுடைய கெடுபிடிகளும், கட்டுமானமும் அதிகமாகிவிட்டன. இதனால் செவங்கிக்கும், கஞ்சமலைக்கு மிடையேயிருந்த தூரம் வெகுவாக வளர்ந்தது.

சில நாட்களுக்குப் பின் —

கஞ்சமலை நகரத்தை விட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தான். மாலை மஞ்சள் வெயில் தொடங்கும் சமயம் —

அன்று அவன் உள்ளத்தில் கரை புரண்டது உற்சாகம். அயனை எட்டு முழம் கோடி யொன்றும், வெள்ளாத கசங்காத புதுக் காகிதமான ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றும் — அவனுக்கு அன்றைய தனித் தேட்டை! இவற்றைச் சம்பாதிக்க, பாட்டனைப் போல்



அவன் எங்கேயும் போய் அடாபிடித்தனமோ, மோசடியோ செய்து விடவில்லை. யோக்கியமாகச் சம்பாதித்த பொருள்தான். வடக்கு வெளிப் பெரிய டன்லையாரின் வீட்டுத் தோட்டத்தில், நெடுங்காலமாக வாழ்ந்து, அநேகம் பசுக்கள், ஆடுக கோழிகளின் உயிரையெல்லாம் உறிஞ்சிவிட்டிருந்த கருநாகத்தைப் பிடிக்க, அவன் செய்திருந்த பேரம் இது. அம்முயற்சியில் ஏற்பட்ட வெற்றிதான் பையிலுள்ள இந்தப் பொருள்களும், தலைக்கூடையுள் அடங்கி ஒடுங்கிச் சுருண்டு கிடக்கும் ஜீவனும்!

கஞ்சமலையின் உள்ளத்தில் புதுமையான பலப்பல எண்ணங்கள் தளிர் நடையிட்டன. சந்தைக்குப் போய்ச் செவங்கிக்கு நவீன தினுசுகளில் ஏதாவது சோப்பு, சீப்பு போன்ற சாமான்கள் வாங்கலாமா வென்று பல முறை எண்ணமிட்டான். முடிவாக, அப்படிச் செய்வதும் உசிதமாகப் படவில்லை. 'காக காக' என்று உயிரை விடும் பாட்டனையல்லவா முதலில் திருப்தி செய்ய வேண்டியிருக்கிறது? இவற்றைக் கண்டாலாவது பாட்டனுக்குத் தன்பேரில் உண்மையான வாஞ்சை பிறக்காதா? இவ்வளவும் இன்றைக்குக் கிடைத்த காரணம் காலை நரி முகத்தில் விழித்திருக்க வேண்டும்! நரி முகம் வேண்டுமானாலும் சல்லிசாகக் காணக் கிடைத்துவிடும். செவந்தியின் முகம் இப்போது அப்படியில்லையே?

சர்க்கஸ் கூடாரத்தை மறைத்தாற் போலிருந்த காளி கோயிலைக் கடந்து திரும்பினான். அந்தத் திருப்பத்துக்கப்பால் அங்கே யார் - யார்?

கஞ்சமலை திடுக்குற்று நின்றான். செவங்கியா அது? அவளா இப்படியெல்லாம் வேஷம் போட்டுக் கொண்டு—

அவன் தன் கண்களையே நம்பாமல் ஒரு தரம் கசக்கி விட்டுக் கொண்டு உற்று நோக்கினான். சந்தேகமேயில்லை—அவள் செவங்கிதான்! தலையிலிருந்து இருபுறமும் தொங்கும் இரட்டைப்பின்னல், பின் தலையில் ஒரு கத்தை மந்தாரைப்பூ, முழங்கை வரையில் நீண்டு தொங்கும் சட்டை. கால் சராய்—இதென்ன வேஷம் இவளுக்கு!

ஆகா! செவங்கி இப்போது இன்னும் எவ்வளவு அழகாக இருக்கிறாள்!

ஐயோ! அவன் யாரு? அவளை இடிக்கிறாற் போல் உரசி நடந்து போகிறானே. அவன் சர்க்கஸ்காரனில்லையா? அடிப்பாவி! அவனோடு ஏதோ சிரித்தபடியே பேசிக் கொண்டு போகிறாளே? தன் கைப்பூவைப் பிடுங்கிக் கொண்டு போன செவங்கியா இவள்?

மறுகணம் கஞ்சமலைக்கு 'ஓ'வெனக் கூப்பாடு போட்டு அவளை அழைக்க வேண்டும் போல் உள்ளம் துடித்தது. ஆனால் நாக்குதான் சுருண்டு கிடந்தது. அவலையும் ஆத்திரத்தையும் அமுக்கியபடியே இரண்டடி நகர்ந்தான். இதற்குள்ளாக அவள் உருவம் திரைக் கூடாரத்துக்குள் மறைந்து விட்டது.

கஞ்சமலையின் கபடம் கண்டிரா நெஞ்சிலே கனிந்திருந்த காதலில் விஷம் கூடிக் கலந்து விட்டது! இனி?

வெறி கொண்டவன் போன்று வீட்டை நோக்கி விரைந்தான். காதலில் பெற்ற ஏமாற்றம் கருநாகமாகப் படமெடுத்துச் சீறிச் சீறி ஆடிற்று. பாட்டனை ஓர் ஆட்டம் ஆட்டி வைத்து விடவே அவனது அங்கங்கள் பதறின. ஆனால் குடிசையை அடைந்ததுமோ, பாவம்! பயங்கரப் பாம்புக்கும் அஞ்சியிராத நெஞ்சம், பாட்டனின் எதிரே பெட்டிப் பாம்பாகச் சுருண்டு விட்டது. நெஞ்சிலே குமைந்தவை எங்கோ சென்று விட்டன. அதுதானே அவனது பிறவிக் குண தோஷம்! உரத்துப் பேசவும் தெரியாத ஊமைநெஞ்சை அவனுக்கு அளித்திருந்த ஆண்டவனின் வஞ்சனைதான், அவனை இப்போதும் பல்லில்லாப் பாம்பாக்கியிருந்தது!

பாட்டன் காட்டிய பரிவும் பாசமும் அன்று ஓர் அலாதியாகத்தான் இருந்தன. வார்த்தைகளுக்கிடையே, செவங்கி சர்க்கஸ் வேலைக்குப் பயிற்சி செய்து கொண்டிருப்பதாகவும், அதனால் பெரும் வாழ்வே எல்லாருக்கும் கிட்டிவிடப் போவதாகவும், தானாகவே பேரனிடம் குறிப்பிட்டான் அந்த நயவஞ்சகப் பாட்டன்.

செவங்கி இனியும் அவனுக்குக் கிடைக்கக் கூடியவளா? அந்த நன்றி கெட்டவளை நினைத்துத்தான் என்ன பயன்? ஆனால் அதற்காக?....

எங்கேயோயிருந்து திடீரென்று நேற்று வந்தவனின் வாழ்வுக்கா செவங்கியை விடுவது? அவனுக்குக்கொஞ்சம் அறிவுகாட்டவேண்டும்.

கஞ்சமலையின் உள்ளத்தில் மோதிய தாப உணர்ச்சிகளும், ஆண்மை வேகமும் அவனை நிலைகொள்ளாது தவிக்க விட்டன. ஏக்கம் அவனை உருமாற்றி விட்டது.

நான்கு தினங்களுக்குப் பிறகு ஒருநாள் வழக்கம்போல் காலை ஏழுமணிக்குக் கஞ்சியருந்தி விட்டுத் தொழிலுக்காகக் கிளம்பிய கஞ்சமலை, நகரத்துப் பக்கம் போகவில்லை. எங்கேயோவெல்லாம் சுற்றிவிட்டு, படைபதைக்கும் வெயில் வேளையில், மேற்கேயிருந்த பரிசல் துறைப் பக்கம் வந்து கொண்டிருந்தான். தாகம் நாவைச் சுருட்டியிழுத்து விக்கலையெழுப்பி விட்டது.



படுகை மேட்டை விட்டுக் கீழிறங்கித் தண்ணீர் இருக்கும் பக்கம் நடந்தான். திடீரென எழுந்த ஓலக்குரல்களால் திகைத்து விட்டான். அங்கேயிருந்த சர்க்கஸ் குடும்பத்தின் கூடாரத்திலிருந்து அத்தகைய ஓலங்கள் வந்தன. கஞ்சமலை விரைந்து குடிசைப் புறத்துக்குத் திரும்பிச் சென்றான். அங்கே—அவன் கண்ட காட்சி ஒரே கணத்துக்குள்ளாக வியப்பிலும், திகைப்பிலும், பதைப்பிலும் வெறுப்பிலுமாக அவனை நிலையாக்கி விட்டன! சர்க்கஸ் நடிகனான குருவாடி. வெட்டிச் சாய்த்த வேலமரம்போல் கீழே கிடக்க, அவனைச் சேர்ந்த சகோதரிகள் இருவரும் துடித்துப் புலம்பிக் கொண்டிருந்தனர். காரணம், குளிப்பதற்காக வழக்கமாக எடுத்துச் செல்லும் மண் குடத்தைக் கையிலெடுக்கையில், அதற்குள் வந்து பதுங்கியிருந்த நாகம் குருவாடியைத் தீண்டி, இந்த நிலைக்காளாக்கி விட்டிருந்தது.

கஞ்சமலையைக் கண்டதும், அந்தச் சகோதரிகளின் புலம்பல் அதிகரித்து விட்டது. அவன் உள்ளம் ஒரு விநாடிக்குள்ளாக ஓராயிரம் சுழற்சி கொண்டு கலங்கியது.

எத்தகைய விளைவு! கீழே கிடப்பவன், அவனுக்குப் போட்டியாக முளைத்து அவனது காதலில் விஷம் கலந்த பாவி! தான் புத்தி கற்பிப்பதற்குள்ளாகக் கடவுளே முந்திக் கொண்டு தண்டனை கொடுத்து விட்டார்! வேண்டும், வேண்டும்!

கிடப்பவனின் பரிதாப நிலையும், எழுந்த ஓலங்களும் அவனை மெய்சிலிர்க்கச் செய்து விட்டன. எண்ணத்துக்கு எதிர் நடையொன்று சட்டெனப் பளிச்சிட்டது!

கீழே குனிந்து, அவனது கைநாடியையும், கால்நாடிகளையும் பரிசோதித்துப் பார்த்தான். நல்ல வேளையாக இதுவரையில் அவனது ஜீவன் சென்று விடவில்லை. இன்னும் சிறிது நேரம் கழிந்து விட்டால், அதுவும் சென்று ஓய்ந்துவிடும்.

பாவம்! தன்னால் முடிந்த செயல் ஒன்றுண்டு. கொஞ்சம் பிரயாசைப்பட்டால், அவனுக்கும் இந்தப் பூமியிலிருக்க இடமளித்து விடலாம்.

மறுவிநாடிப் பொழுதுக்குள்ளாக, அந்தப் படித்தறியாப் பாம்பாட்டியின் நெஞ்சிலே பகைமாறிப் பரிவு காட்டும் பழைமைப் பண்பு படிந்து விட்டது! மிகுந்த பரபரப்புடன், மடியிலிருந்த தகர டப்பியை யெடுத்தான். ஒரு கயிற்றை வாங்கிக் கையில் கடிபட்டிருந்த இடத்துக்கு மேலாக இறுக்கிக் கட்டினான். கத்தியால் கடிவாயைக் கீறி, சிறிது இரத்தத்தை வெளியாக்கினான். பின்னர், நாலைந்து ரகமான வேர்த்துண்டுகளை இழைத்து அதன் மேலெல்லாம் அப்பிவிட்டு, அவன் மூக்குத் துவாரங்களிலும் காட்டிக் கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்குப் பின் கட்டையாகக் கிடந்தவனின் உடலில் இலேசான அசைவேற்பட்டது. மென்மூச்சும் முனகலும் இழைவிட்டன. முடிவாக, ஒரு பெரும் தும்மல் வெளியாயிற்று. அதே சமயம், அச்சகோதரிகள் இருவரும் கஞ்சமலையைத் தெய்வமாகவே போற்றத் தொடங்கினர். கஞ்சமலை அவ்விடத்தை விட்டுக் காற்றாய்ப் பறந்து சென்றுவிட்டான்!

அவன் ஆற்றில் இறங்கித் தாகம் தணித்துக் கொண்டபோதுதான் ஒரு முக்கியமான விஷயம் அவனது நினைவுக்கு வந்தது. முதல் நாள் பிடித்து வந்திருந்த புது சர்ப்பத்துக்கு, இன்னும் விஷப் பல் பிடுங்கினபாடில்லை. அது—குடிசையின் உயரத்து மாடப்புரைப் பெட்டிக்குள்ளிருந்தாலும், தப்பித் தவறிக் கிளம்பி விட்டால், எத்தகைய ஆபத்தை விளைவித்து விடும்? இந்தச் சர்க்கஸ்காரனுக்கு நேர்ந்த கதியைப் போன்று தன் வீட்டிலும் குழந்தைகளுக்கு ஏதாவது—?

கஞ்சமலையின் நெஞ்சு 'பகீ'ரென்றது. வேகமாக நடந்து வீட்டுக்கு வந்தான். வந்தவன், கிழவனுடனோ, செவங்கியுடனோ ஒரு வார்த்தையும் வைத்துக் கொள்ளவில்லை. மாடப்புரையில் வைத்திருந்த பாம்புப் பெட்டியைத் தூக்கியவன் திடுக்குற்றான். அப்பெட்டியில் கனமேயில்லை. அதற்குள் சிறைப்பட்டிருந்த விஷப் பிறவி எவ்வாறோ தப்பிப் போயிருந்தது! கஞ்சமலை பதறிக்கொண்டே, குடிசையின் நாலாபுறமும் ஆராயத்தொடங்கி விட்டான். பாட்டனும் பேத்தியுமோ அரண்டனர்; பயனில்லை. முடிவாக, அதைத் தேடிக் கொண்டு வெளியேறினான்.

பரிசல் துறையில் நடந்த சம்பவங்கள் மறுதினம் ஊரெல்லாம் பரவிவிட்டது. கருளியாண்டியும் செவங்கியும்கூட மறுதினம்தான் அதை அறிந்து அதிசயித்தனர்.

சர்க்கஸ்காரனை குருவாடியின் உயிரை மீட்டுக் கொடுத்த கஞ்சமலையைப் பார்த்திராதவர்களும் கூடப் பாராட்டிக் கொண்டிருந்தனர். குருவாடியின் சர்க்கஸ் முதலாளி ஐம்பது ரூபாய் சன்மானத்துடன் கஞ்சமலையைத் தேடி வந்தார். அவன் வழக்கம் போல் வீட்டிலிருந்தால்தானே? கிழவன் கருளியாண்டி மட்டும் வந்தவரிடம் நயமாகவும், பயமாகவும் பேசி வந்த பொருளைப் பக்குவமாக வாங்கிக் கொண்டு, கும்பிடு போட்டு அனுப்பி வைத்தான்!

நடு உருமவேளை. கொள்ளிடக்கரைத் தோப்பில் அங்கு மிங்குமாக உலாத்திக் கொண்டிருந்தான் கஞ்சமலை. அப்போது அவன் நெஞ்சில் வெறுப்பும், சலிப்பும் புகைந்து கொண்டிருந்தன. எத்தகைய பெருமையும் பலனும் தேடி வந்தால்தான் என்ன? அவை அவனுக்கில்லை!

பிறருயிரைக் காத்துவிட்ட கஞ்சமலையின் உள்ளத்தில் தன் உயிரின்மேலேயே வெறுப்பு மிகுந்துவிட்டது. சர்க்கஸ்காரனைத் தீண்டிய பாம்பு, இங்கேயும் வந்து அவனைத் தீண்டினாலும் தேவலைதான். பாட்டனுக்கு வேண்டியது பணம்! இனி எதற்காகத் தான் வாழ வேண்டும்?—

கையுடன் எடுத்து வந்திருந்த பாம்புப் பெட்டிகளைக் கொஞ்ச தூரத்துக்கப்பால் வைத்துவிட்டு, கீழேயிருந்த மணல் வெளியில் படுத்தான். படுத்தவன் — படுத்தவன்தான்.

பொழுது இறங்கிக் கொண்டேயிருந்தது.

வெகு நேரத்துக்குப் பின், மண் குடமும் கையுமாக நீரெடுக்க வந்த செவங்கியின் விழிகளிலே, கஞ்சமலையின் அலங்கோலக்கிடை தென்பட்டது. அவள் 'ஓ'வென அலறினாள். பதறியபடி கீழே அமர்ந்து, அவனது முகத்தைப் பற்றிக்கொண்டு கதறத் தொடங்கி விட்டாள். அதன் காரணம், கஞ்சமலையின்

கண்ணிமைகள் அழுந்திக் கிடந்ததே! அவனது உடலில் மூச்சு ஒன்று இருப்பதாகக் கூடத் தெரியவில்லை. சற்றுத் தூரத்துக்கப்பால் அவனால் வைக்கப்பெற்றிருந்த பாம்புப் பெட்டிகளில் ஒன்றின் மூடி லேசாகத் திறந்துகிடந்தது!

"ஐயோ என் ராசா! இனி நான் எப்படி வாழ்வேன் ராசா! நான் நினைச்சதைப் பாழாக்கிட்டீங்களே ராசா! கேடு செஞ்சவனுக்குக் கேடு குடுத்திட்டியே கடவுளே!"—இவ்வாறு கதறியபடி அவனது கரங்களை யணைத்துக் கண்ணீர் பெருக்கினாள் செவங்கி.

நான்கு நாழிகை காலம் கழிந்தது.

'பட்'டெனச் சீறிப் பாயும் நாகம்போன்று துள்ளி யெழுந்தான் படுத்துக் கிடந்த கஞ்சமலை! அவன் முகத்திலே புது மகிழ்ச்சி குறும்புப் பொலிவுடன் கொந்தளித்தது.

"செவங்கி, செவங்கி! இன்னைக்கித்தான் உன்னை அறிய முடிஞ்சுது. அரும்பாடு பட்டு! உன் மனசுதான் எனக்கும் சாகமாட்டாத உயிராசையைக் கொடுத்திச்சு—" இவ்வாறு கூறிக்கொண்டே அவளது கரத்தைப்பற்றினான் கஞ்சமலை. அதேகணம், செவங்கி வியப்பும், துடிப்பும் பெருகிய விழிகளுடன் அவன் கால்களின் கீழேயமர்ந்து அவற்றைப் பற்றி, "அத்தான் — நீ சாகக் கூடாது — சாகவே கூடாது! எனக்குக் காசும் வேணும், பணமும் வேணும். நீதான் — நீதான் — உன் கைப் பூவுதான் வேணும்! பாட்டன் பண்ணுற அநியாயம் தாங்க மாட்டாமேதான், அந்தச் சர்க்கஸ்காரன்கூடப் பழகினேன். அந்தப் பாவி என்னைத் தாறுமாறாக நினைச்சதைக் கண்டுதான், வீட்டு மாடத்திலேயிருந்த நாகத்தைக் கொண்டு போயி அவன் குடத்திலே பதுக்கி வைச்சிட்டு வந்தேன்! அந்த ஒளிஞ்சு போன படுபாவியை நீங்க பிணைப்பு மூட்டிட்டீங்க!" என்றாள் ஆவேசத்தோடு.

"ஆ ஆ! செவங்கி! என்னது? நீயா அதைக் கொண்டு போயி—" கஞ்சமலை துள்ளினான்.

அவள் நிறைவுப் பெருமூச்சை விடுத்தபடி வேறு புறம் திரும்பினாள். ஆனால் அவளது அகத்திலே அதுகாறும் ஆழம் காட்டாது ஆழ்ந்து கிடந்த ஆசைக் குமைச்சல்கள் அனைத்தையும் அப்போது அழகொளியாகச் செம்மவிட்டுக் காட்டியது முகம்! சொன்னதையே மீண்டும் ஒரு தடவை சொன்னாள்—குறுநகை குழைய. அப்போதுதான் அவனுக்கும் மாயமாகியிருந்த விஷ ஜந்துவின் நிலையையறிந்து ஆறுதல் கொள்ள முடிந்தது.

"செவங்கி! உண்மையாச் சொல்றேன். பாம்பாட்டிக்கேத்த துணிச்சல் எனக்கில்லே, உனக்குத்தான். இந்தப் பாம்பாட்டியையும் ஆட்டி வைக்கிற மகுடி உன் முகந்தான்" என்றான் கஞ்சமலை.

அவர்கள் இருவரும் குடிசைக்குத் திரும்பிய போது அவர்களது ஒருமித்த புதுமைத் தெம்பைக் கண்டான் பாட்டன். அப்போதே மகுடியால் மயங்கிச் சுருளும் நாகமாக அடங்கி விட்டான்.

காலத்து முறைமையை யொட்டிக் காத்திருந்த கஞ்சமலையின் காதலில், விஷம் கலக்க வில்லை! காவாலி ஒருவனின் கயமைக் காதலைத்தான், கடு விஷத்தால் கரைத்தொழித்தாள் கஞ்சமலையின் காதலி!

# விவாகங்கள்



பம்பாய் கனரா பாங்கைச் சேர்ந்த திரு அனந்தகிருஷ்ணனுக்கும் சௌபாக்கியவதி சரோஜாவுக்கும் விவாகம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



உடுமலைப்பேட்டை டாக்டர் திரு ராமமூர்த்தியின் புதல்வி சௌ. யோகாம்பாளுக்கும் டாக்டர் எம். கே. ரங்கநாதனுக்கும் திருமணம் நடந்தது.



கோத்தகிரி கல்வி ஏஜெண்ட் திரு எம். கே. நஞ்சா கவுடர் அவர்களின் புதல்வி சௌ. லக்ஷ்மி தேவிக்கும் திரு இராமனுக்கும் விவாகம் நடைபெற்றது.



டாக்டர் பி. ஆர். நடராஜய்யர் அவர்களின் புதல்வி சௌ. சம்பகலக்ஷ்மிக்கும் திரு ஆர். ராஜகோபாலன் எம். ஏ.க்கும் திருமணம் நடைபெற்றது.



திரு பி. ஆர். சீனிவாசன் குமாரர் திரு ஜகந்நாதன் தென்னிந்திய ரயில்வே அதிகாரி திரு ஆர். சௌரிராஜனின் புதல்வி சௌ. சம்பகலக்ஷ்மியை மணந்தார்.



புத்தமங்கலம் திரு ஜகதீசய்யர் அவர்களின் புதல்வி சௌ. அலமேலுவுக்கும் திரு வி. சுப்பிரமணியத்துக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தது.



# திருமூலர் தவமொழி

ராஜாஜி - சோமு

## 11

திருமூலர் கலைகளை யெல்லாம் கற்றுத் தேர்ந்தவர். வைத்தியம், இரசாயனம், பௌதிகம், வான சாஸ்திரம் முதலிய எல்லாத் துறைகளிலும் வல்லவர் அவர். சாதாரண மனித அறிவின் எல்லைக்குள்ளும், அதற்கு அப்பாலும் விரிந்து பரந்து நிற்கிற தத்துவங்களை யெல்லாம் மெய்யுணர்வினால் கண்டு பேசுகிற ரிஷி என்பதைத் திருமந்திர நூலில் பல இடங்களிலும் வியக்கத்தக்க விதத்தில் காண்கிறோம்.

அறிவுக்கு அப்பாற்பட்ட தத்துவங்களை விளக்குவதற்காக, அறிவுக்குப் புலனாகிற உண்மைகளை உதாரணம் காட்டுவார்.

சூரிய காந்தக் கல் என்று ஒரு வகையான 'லென்ஸ்' (Lens). அதன் கீழ் பஞ்சை வைத்துச் சூரியனுடைய கதிரை அந்தக் கண்ணாடியின் வழியாகச் செலுத்தினோமானால், பஞ்சில் தீப்பற்றிக் கொள்ளும்.

சூரியகாந்தக் கல்லுக்குச் சூரியனின் கதிர்களைக் கூப்பிச் செலுத்தக் 'கூடிய இயல்பு இருக்கிறது. பஞ்சு தீப்பிடிக்கும் இயல்பு கொண்டது. எனினும், சூரியகாந்தக் கல்லையும் பஞ்சையும் ஒன்று சேர்த்து நம்முடைய மடியிலுள் வைத்துக் கொண்டிருந்தால் தீப் பிடிக்கிறதா? இல்லை! சூரியனுக்கு எதிரே கல்லைக் காண்பிக்க வேண்டும். அப்போதுதான் சூரியனிடமிருந்து ஒளிக் கற்றையை வாங்கி அதைக் குவித்துப் பஞ்சிலே பாய்ச்சுகிறது கல்!

இந்த இயற்கை உண்மையை எடுத்துக் கொண்டு பெரிய ஆன்ம தத்துவத்தை விளக்குகிறார் முனிவர்.

**சூரிய காந்தமும்**
**சூழ்பஞ்சும் போலவே,**
**சூரிய காந்தம்**
**சூழ்பஞ்சைச் சுட்டிடா.**

இந்த ஆன்மாவோடு மும்மலமாகிய அழுக்குப் பிணைந்து கிடப்பது, சூரிய காந்தக் கல்லோடு பஞ்சைச் சுற்றி வைத்திருப்பது போலே! ஆன்மாவாகிய சூரிய காந்தக் கண்ணாடிக்கு இந்தப் பாசமாகிய பஞ்சைத் தன்னியல்பாகச் சுட்டெரித்துவிட முடியாது!

**சூரியன் சந்நிதி**
**யில்சுடு மாறுபோல்**
**ஆரியன் தோற்றமுன்**
**அற்ற மலங்களே!**

இறைவனே குருவாகி வந்து தன்னுடைய ஞான ஒளியை இந்த ஆன்மக் கண்ணாடிக்குள்ளே செலுத்தினாலன்றி, ஆணவம், கன்மம், மாயை என்ற பாச மலங்கள் எரிய மாட்டா!

சூரிய காந்தக் கல்லும் பஞ்சும் ஒன்றாகப் பொதிந்து வைத்தது போல், இந்த உடம்புக்குள் ஆன்மாவைச் சுற்றி மும்மல அழுக்குகள் சூழ்ந்து நிற்கின்றன. இந்த மாசுகள் அகலுவதற்காக அந்தச் சூரிய காந்தக் கல்லை என்ன செய்ய வேண்டும்? ஞான குருவாகிய இறைவனை நோக்கி நிறுத்த

வேண்டும். அப்படி நிறுத்தினால் பஞ்சு எரிவது போல் மாசுகள் எரிந்துவிடும்.

**சூரிய காந்தம்**
**சூழ்பஞ்சைச் சுட்டிடா**

ஆன்மா தானாகவே தன்னைச் சூழ்ந்த மாசுகளைக் களைந்துகொள்ள இயலாது.

**சூரியன் சந்நிதி**
**யில்சுடு மாறுபோல்**
**ஆரியன் தோற்றமுன்**
**அற்ற மலங்களே**

[சூரியன் சந்நிதியில் - சூரியனுக்கு முன்பாக. சுடு மாறு போல்-சுடுவது போல். ஆரியன் - இறைவனுடைய ஞான குரு சொரூபம். தோற்றமுன் - தோற்றத்தின் முன்; அவனுடைய ஞான நோக்கு பாய்ந்தவுடன், அந்தத் தரிசன ஒளியிலே. 'அற்ற' என்பது பன்மை வினைமுற்று—தீர்ந்து விடுகின்றன, சந்தேகமில்லை, அறவே தீர்ந்தே விட்டன. மலங்களே-ஆன்மாவைப் பிணித்துள்ள பாச அழுக்குகள். ஏ — உறுதிக்காக வந்த தேற்றேகாரம்.]

இறைவனாகிய குருவின் சந்நிதியில் ஆன்மா தன்னை நிறுத்திக் கொண்டால், அந்த ஞானக் கதிரொளியின் வேகத்தினால் மாசுகள் எரிந்து போய் விடுகின்றன; பூதக் கண்ணாடி வழியாக வருகிற சூரிய கிரணம் பஞ்சை எரிப்பது போல.

ஆன்மாக்களின் நிலைக்கு ஏற்ப இறைவனே குருவாக வந்து ஞானம் வழங்குகிறான் என்பது சித்தாந்தம். குருவைச் சூரியனுக்கும், குருவருளைச் சூரியனுடைய கதிருக்கும், ஆன்மாவைச் சூரிய காந்தக் கல்லுக்கும், மும்மல அழுக்கைப் பஞ்சுக்கும் உவமை கூட்டி இந்த உண்மையை விளக்குகிறது இத் திருமந்திரப் பாட்டு.

**சூரிய காந்தமும்**
**சூழ்பஞ்சும் போலவே,**
**சூரிய காந்தம்**
**சூழ்பஞ்சைச் சுட்டிடா;**
**சூரியன் சந்நிதி**
**யிற்சுடு மாறுபோல்,**
**ஆரியன் தோற்றமுன்**
**அற்ற மலங்களே!**

என் புதிய

# உஷா

## தையல் மிஷினில் தைப்பது உற்சாகமளிக்கிறது. சிக்கனமும் கூட!

உஷா தையல் மிஷின் வாங்குவதற்கு முன்னால் வீட்டில் தைப்பது அவ்வளவு நல்ல பொழுதுபோக்கு என்பது தெரியவே தெரியாது. அற்புதமாக பயனளிக்கக் கூடிய ஒரு நல்ல முதலீடு கூட. நாமே தைக்கும்பொழுது செலவு குறைவல்லவா? ஆகவே, இப்பொழுது என் விருப்பப்படியே அதிகமாக துணிமணிகள் தைத்துக்கொள்கிறேன்.

மிக நேர்த்தியான தையலை அளிக்கும் என் உஷா மிஷின் நீடித்து நன்றாக உழைக்கக் கூடியது. என்னால் உஷா மிஷின் இல்லாமல் இருக்கவே முடியாது.

"உஷாவில் தைத்து பணத்தை மிச்சப்படுத்துங்கள்" என்கிறார்களே அது உண்மையே.



நீங்கள் இதற்கு முன்பு தைத்ததே இல்லையென்றாலும் உஷா எம்ப்ராய்டரி டெய்லரிங் பள்ளியில் சேர்ந்து குறைந்த செலவில் அதி விரைவில் தைக்கக் கற்றுக்கொள்ளலாம். உங்கள் வீட்டிற்கருகிலுள்ள உஷா டீலரைக் கேளுங்கள் அல்லது விவரங்களுக்கு போஸ்ட் பாக்ஸ் 2158, கல்கத்தாவிற்கு எழுதுங்கள்.

JBSM/64

ஜே இஞ்சினீரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31

# நரிவேட்டை

111

கதை: ஜெயந்தி
சித்திரம்: வினு

தான் சூதுவாது அறியாதவள் என்று கூறும் லிண்டி, ரவியை அன்புடன் வரவேற்று உபசரிப்பதை மறைந்திருந்து காண்கிறான் குமார். லிண்டி தன்னை ஏமாற்றுகிறாள் என்ற எண்ணம் அவன் மனத்தில் உறுதிப்படுகிறது.















ரவி இதைக்கேட்டுச் சஞ்சலமடைகிறான்.
யார்? யார் அப்படிச் சொல்கிறவன்?


மறைந்திருக்கும் குமார் வெளிப்பட்டு....
ஏன், நான்தான் சொல்கிறேன்! மறுப்பதற்கு உனக்குத் துணிவுண்டா? ஸின்டி! வஞ்சகி! உன்வேஷம் கலைந்து விட்டது!


முதன் முறையாகக் குமாரைக் காண்பதுபோலப் பாவனை செய்கிறான் ரவி.
ஸின்டி யார் இவன்? தாறுமாறாகப் பேசுகிறானே?
அடாடா! என்ன நடிப்பு?
குமார்! இவர்தான் ரவி. கம்பனி வியாபாரி. அப்பாவின் நண்பர்.


குமாரா? இவனைத்தானே போலீஸில் சந்தேகித்து லாக்-அப்பில் வைத்ததாகச் சொன்னாய், ஸின்டி? அயோக்கியப் பயலே! டெஸிமோனாவைக் கொன்றதோடல்லாமல் அவரை ஒற்றன் என்றும் இழிவாகப் பேசுகிறாயா?


ஸின்டி அவர்களுக்கிடையில் புகுந்து....
யோசிக்காமல் குமாரைத் தாறுமாறாகத் திட்டாதீர்கள். நான் சகிக்கவே மாட்டேன்!


பெண்பிள்ளைக்குப் பின்னால் ஒளிந்து கொள்ளும் தீரனைப் பார்! ஹா! ஹா!!



இந்தா! டில்லியில் எனக்குக் கொடுத்ததற்குப் பதில்!
ஐயோ!




குமார்...!






ஐயோ! துப்பாக்கி!!




நகராதே! ஜாக்கிரதை இன்றோடு உன் கதை முடியட்டும்!




தொடரும்

# உங்கள் வீட்டிலிருக்கும் எல்லா பூச்சிகளையும் ஒழிக்க ட்ரை-பாக் உபயோகியுங்கள்

# ட்ரை-பாக்

இது புதியது. வீட்டிலிருக்கும் பூச்சிகளை தொலைப்பதற்கென ஏற்பட்டுள்ள மருந்துகள் கொண்டது. அருமையான, பல உபயோகங்களுக்குகந்த பையில் பாக் செய்யப்பட்டுள்ளது.



**ட்ரை-பாக்**

பூச்சிகளின் தொல்லையினின்றும் உங்களை எப்பொழுதும் பாதுகாக்கிறது.

**ரோசெக்ஸ்** ஒரு புதிய பௌடர். உங்கள் வீட்டிலிருக்கும் கரப்பான் பூச்சிகளை அகற்றுகிறது. இரவில் இதைத் தூவி விடியற் காலையில் அவைகளை அடியோடு ஒழியுங்கள்.

**ஸ்ப்ரே** ஒரு புதிய கிருமிநாசினி திரவம். ஈக்கள், கொசுக்கள் மற்றும் பறக்கும் பூச்சிகளை உடனடியாகத் தொலைத்து விடுகிறது.

**டிக்-20** பிரக்கியாதிபெற்ற கிருமி நாசினி. மற்ற அநேக கிருமி நாசினிகள் செய்ய முயலுவதைச் செய்தே காண்பிப்பது.

**டிக்-20 மூட்டைப் பூச்சிகளைச் கொல்லுகிறது!**

**பிரத்தியேக அளிப்பு!** முழு கிருமி நாசினி கருவியை வாங்கி, ட்ரை-பாக் பிரத்தியேக அளிப்பைப் பெற்றுக்கொள்ளுங்கள். தெரிந்தெடுப்பதற்கெனவே 20 வர்ணங்களில் கிடைக்கும் ஒரு அருமையான பிளாஸ்டிக் ஜிப் பை **ஸ்டாக் இருக்கும்போதே நீங்கள் இன்றே பெற்றுக்கொள்ளுங்கள்!**

ஹான்ட் பேக், ஷேவிங் கிட், ஸ்கூல்  பேக், டாய்லட் பேக், பிக்னிக் பேக். ஹான்ட் பே ட், ஸ்கூல் பேக், ஷாப்பிங் பேக், டாய்லட் பேக், பிக்னிக் பேக், ஷேவிங் கிட், ஸ்கூல் பேக், ஷாப்பிங் பேக், , பிக்னிக் பேக்.

# tri-pak

டாடா-பைஸன் தயாரிப்புகள்

5-25-6



# மணிபல்லவம்

## 7ம் பூதம் புறப்பட்டது!

வானளாவி நின்ற அந்தப் பெருமாளிகையிலிருந்து வெளியேறிப் பட்டினப் பாக்கத்தின் அகன்ற வீதியில் விரைந்து நடந்தபோது ஓவியன் மணிமார்பனின் உள்ளத்தில் துன்பங்களின் கோட்டையிலிருந்து விடுதலையடைந்து வந்து விட்டாற் போன்ற மகிழ்ச்சி நிறைந்திருந்தது. வீதியின் இருபுறமும் இரவின் அழகுகள் விவரிக்க இயலாத சோபையுடன் திகழ்ந்தன. இரவு, கண் விழித்துப் பார்ப்பது போல் எங்கு நோக்கினும் விளக்கொளிகள் தோன்றின. மாளிகைகளின் முன்புறங்களில் படர்ந்திருந்த 'இல்வளர்முல்லை' என்னும் வகையைச் சேர்ந்த முல்லைக் கொடியில் பூக்கள் பூத்துக் குலுங்கி வீதியில் வீசிய காற்றையே மணக்கச் செய்து கொண்டிருந்தன.

மணிமார்பனுக்கு மணங்களிலிருந்து எண்ணங்கள் பிறந்தன. எண்ணங்களிலிருந்து புதிய எண்ணங்கள் கிளைத்தன. மணங்களைத் தூண்டுதலாகக் கொண்டு பிறந்த எண்ணங்களும் மணந்தன. நெஞ்சிலும், உடம்பிலும் வாழ்க்கையைப் பற்றிய துணிவுகளும், நம்பிக்கையும் அப்போதுதான் புதியனவாகப் பிறப்பது போல் தோன்றின. மணங்கள், இனிய இசைகள், குளிர்ந்த காற்று, — இவற்றின் அருகில் இவற்றை உணரும் போது, "வாழ்க்கையில் மகிழ்வதற்கு ஏதோ இருக்கிறது. எங்கோ இருக்கிறது. அதைத் தேடு!" என்பது போல் ஒரு நம்பிக்கை யுணர்ச்சியை மணிமார்பன் பல முறை அடைந்திருக்கிறான். மடியில் முடிந்து வைத்துக் கொண்டிருந்த மணிமாலையைப் பற்றி நினைத்து மகிழ்ந்தான் அவன். சிறிது நேரத்துக்கு முன்பு அந்த மாளிகையிலிருந்து அவன் வெளியேறிய போது சுரமஞ்சரி அவனுக்கு மனம் விரும்பிக் கொடுத்த பரிசு அல்லவா அது? அவ்வளவு பெரிய பரிசை அவனிடமிருந்து எதிர்பார்க்கவே இல்லை அவன். தான் அந்த மணிமாலையை வாங்கிக் கொள்வதற்குத் தயங்கிய போது அவள் கூறிய வார்த்தைகளை மறுபடியும் நினைத்துக் கொண்டான் அவன். 'தகுதி என்பது கொடுக்கிறவர்களுக்கு இருந்தால் போதும். வாங்கிக் கொள்கிறவர்களுக்கு வாங்கிக் கொள்வதுதான் பெரிய தகுதி' என்று கூறினாளே அவள்! செல்வர்கள் வார்த்தைகளைக்கூடப் பெருந்தன்மையாகச் செலவழிக்கிறார்களே - என்று அவளுடைய வார்த்தைகளை எண்ணிய போது அவனுக்கு ஒரு வியப்பு உண்டாயிற்று. சுரமஞ்சரி மணிமாலையளித்ததில் எவ்வளவு பெருந்தன்மை இருந்ததோ, அவ்வளவுக்

நா. பார்த்தசாரதி





குச் சிறிதும் குறையாத பெருந்தன்மை அவள் அதை அளிக்கும்போது கூறிய வார்த்தைகளிலும் இருந்ததை அவன் உணர்ந்தான்.

'அடடா! மனத்துக்குப் பற்றுதல் இல்லாத சூழ்நிலையிலிருந்தும், ஒட்டுதல் இல்லாத உறவுகளிலிருந்தும், விடுபட்டு வெளியேறிச் செல்வது எத்துணை மகிழ்ச்சியாயிருக்கிறது? இங்கே அமரலாமோ, அங்கே நிற்கலாமோ, கூடாதோ என்றெல்லாம் பெருஞ்செல்வர் இல்லத்தில் கூசிக் கொண்டே பழகும் வறுமையாளனாக நான் இனி வாடித் தவிக்க வேண்டியதில்லை. நாளையிலிருந்து என்னுடைய நல்ல காலம் தொடங்குகிறது. மீண்டும் இனிமேல் பட்டினப்பாக்கத்து மாளிகைக்குத் திரும்பி வரவேண்டிய நிலை எனக்கு இல்லை. இதோ என் மடியிலிருக்கும் இந்த மணிமாலையை விற்றால் கவலையில்லாமல் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமான பொற்கழஞ்சுகள் கிடைத்து விடும். நானும் என்னுடைய ஓவியக் கலையும் வளர்ந்து பெருகி வாழலாம். ஆனால் அதற்கு முன் இன்னும் ஒரே ஒரு துன்பம் எனக்கு இருக்கிறது. சுரமஞ்சரிதேவியின் உள்ளத்தைக் கவர்ந்த அந்த முரட்டு மனிதரைச் சந்தித்து அவள் கூறியவற்றைச் சொல்லி, எச்சரிக்கை செய்து விட்டுப் போக வேண்டும். அந்த மனிதரைச் சந்தித்து இரண்டாம் முறையாக அவமானப்பட நேர்ந்தாலும் பட்டுக் கொள்ள வேண்டியதுதான். அந்த மனிதரிடமிருந்து அடைகிற கடைசி அவமானமாக இருக்கட்டும் இது'-என்று இவ்வாறெல்லாம் எண்ணிக் கொண்டே வேகமாக நடந்து சென்று கொண்டிருந்தான் மணிமார்பன்.

வெளியே சென்றிருக்கும் நகைவேழம்பர் எதிரே திரும்பி வர நேர்ந்து, தான் அவர் கண்களில் தென்பட்டுத் துன்புறும்படி ஆகிவிடக் கூடாதே என்று அஞ்சியே அவன் வேகமாகச் சென்று கொண்டிருந்தான். 'நாளங்காடியின் அடர்த்திக்குள் புகுந்து விட்டால் அப்புறம் கவலை இல்லை. பெரிய தெருக்கள் தவிரக் குறுகிய வழிகளும், சிறிய முடுக்குக்களும் மருவூர்ப்பாக்கத்தில் அதிகமாக இருப்பதனால், நாளங்காடியைக் கடந்து மருவூர்ப்பாக்கத்துக்குள் செல்லும்போது பிறர் கவனத்துக்கு ஆளாகாமல் மறைந்து சென்று விடலாம். மருவூர்ப்பாக்கத்தில் ஆலமுற்றத்துப் படைக்கலச்சாலையில் அந்த மனிதரைச் சந்தித்து விட்டு இரவோடு இரவாக இந்த நகரத்திலிருந்து வெளியேறிவிட வேண்டும்'—என்று திட்டமிட்டிருந்தது அந்த ஏழை ஓவியனின் மனம். தன் தாய் நாட்டையும், தாயையும், தந்தையையும் ஏக்கத்தோடு நினைத்தான் அவன்.

வைகை வள நாடாகிய பாண்டிய நாட்டில் தமிழ் மதுரைக் கோநகரில் ஆற்றின் வடகரைமேலே திருமருதமுன் துறை என்னுமிடத்தில் மருத மரங்களின் நடுவே அமைந்திருந்த தனது சிறிய வீட்டையும் மூப்படைந்த பெற்றோர் நிலையையும் மனக் கண்களால் நினைத்துப் பார்த்துக் கொண்டான் ஓவியன் மணிமார்பன். இரண்டு தினங்களுக்குமுன், இந்திர விழாவைக் காண்பதற்காக மதுரையிலிருந்து பூம்புகாருக்குப் புறப்பட்ட யாத்திரைக் குழுவினருடன் தானும் சேர்ந்து புறப்பட்ட அந்த நாளும், வீட்டு வாயிலில் கிழப்பெற்றோர் தனக்கு விடை கொடுத்த துயரக் காட்சியும் மணிமார்பனுக்கு நினைவு வந்தன. 'காவிரிப்பூம் பட்டினத்து இந்திர விழாவில் நிறைய ஓவியங்கள் எழுதி விற்றும், பரிசு பெற்றும், தான் பெரும் பொருளோடு திரும்பி வரப் போவதனைக் கற்பனை செய்தபடி நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கும் தன் பெற்றோரைப் பற்றி நினைத்தபோது மணிமார்பனுக்கு மனம் நெகிழ்ந்தது. கண்கள் கலங்கின. அப்போதே அந்த விநாடியே பறந்து சென்று மதுரையில் வையைக் கரையில் குதித்துத் தன் வீட்டுக்கு ஓடிப் போய், கிழப் பெற்றோரை மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கச் செய்ய வேண்டும் போல் ஆசையாயிருந்தது மணிமார்பனுக்கு.

தனக்குச் சுரமஞ்சரி அளித்திருந்த மணிமாலையை நாளங்காடிச் சதுக்கத்திலுள்ள பொன் வணிகர் எவரிடமாவது விற்றுப் பொற்கழஞ்சுகளாக மாற்றிக் கொண்டு மதுரைக்குப் புறப்படலாமென எண்ணினான் அவன். நீலநாகர் படைக் கலச்சாலைக்குப் போய்ச் சுரமஞ்சரி கூறியனுப்பியிருந்த செய்தியை அதற்குரியவரிடம் கூறிவிட்டுத் திரும்பி வந்து மணிமாலையை விற்கலாம் என்றால் நாளங்காடிக் கடைகளை அதற்குள் அடைத்துவிடுவார்கள். இரவு நேரத்தில் அல்லங்காடிக் கடைகள் திறந்திருக்குமாயினும், இவ்வளவு மதிப்பீடு உள்ள அரிய மணிமாலையை விலைபேசி விற்கிற அளவுக்குப் பெரிய கடைகள் அங்கு இல்லை. நாளங்காடி நாற்சந்திக்கு வந்தவுடன் பூதசதுக்கத்துக்கு எதிரே தயங்கி நின்றான் மணிமார்பன். இந்திர விழாவின் இரண்டாம் நாள்தான் அந்த இடத்தில் சுரமஞ்சரி என்னும் செல்வக் குடும்பத்துப் பெண்ணைச் சந்திக்க நேர்ந்ததும், அவளுக்காக இளங்குமரனை நிற்கச் செய்து ஓவியம் வரைந்ததும், அதன் காரண

மாகப் பின்பு தனக்கு ஏற்பட்ட நிகழ்ச்சிகளும் அவன் நினைவில் படர்ந்தன. அவன் நினைப்பிலும், நோக்கிலும் காவிரிப்பூம்பட்டின நகரம் இப்போதுகூட அழகும் பெருமையும் நிறைந்ததாகத்தான் தோன்றியது. ஆனால் நகைவேழம்பர் என்னும் குரூரமான மனிதரையும், அவரை வைத்து ஆதரவு தந்து கொண்டிருக்கும் எட்டிப் பட்டம் பெற்ற பெருநிதிச் செல்வரையும் நினைத்தபோதுதான் காவிரிப்பூம்பட்டினம் பயங்கரமும், சூழ்ச்சிகளும் மிகுந்த நகரமோ என்ற அச்சம் எழுந்தது.

பூம்புகாரின் மாபெரும் துறைமுகத்துக்கு, நெடுந்தொலைவிலுள்ள நாடுகளிலிருந்தெல்லாம் கப்பல்கள் வந்து போவதனால் பல நாட்டு வணிகரும் நிறைந்து, வாணிகம் செழிப்பும் சிறப்புமாக நடைபெற்று, வாழவும், பொருள் சேர்க்கவும் வழிகள் அதிகமாயிருந்தன. அதை நினைத்துக் கொண்டுதான் மணிமார்பன் அந்த நகரத்துக்கு வந்திருந்தான். ஆனால் அவன் அங்கு வந்ததிலிருந்து நடந்த நிகழ்ச்சிகள் என்னவோ வேறுவிதமாக அமைந்து விட்டன 'உடும்பைப் பிடிக்க வேண்டாம். உடும்புப் பிடியிலிருந்து கைகளை விடுவித்துக் கொண்டு ஓடினால் போதும்'—என்ற மனநிலையை அடைந்து விட்டான் அவன்.

எதிரே நாளங்காடிப் பூதங்கள் இரண்டும் பாசக் கயிற்றையும், கதாயுதத்தையும் ஓங்கிக்கொண்டு இருளில் பயங்கரமாகக் காட்சியளித்தன. 'பொய்த் தவவேடம் பூண்டோர், நிறையிலாப் பெண்மணிகள், கீழ்மைக் குணமுள்ள அமைச்சர்கள், ஒழுக்கமற்ற ஆடவர்கள், பொய்ச் சாட்சி சொல்வோர், புறம் பேசுவோர்,- இவர்களையெல்லாம் எங்கள் பாசக் கயிற்றால் பற்றிப் புடைத்து உண்போம்' என்று நள்ளிரவு நேரங்களில் நான்கு காத தூரம் கேட்கும்படி இடிக் குரலில் அந்தப் பூதங்கள் முழக்கமிடுவதாகக் கூறிப் பொல்லாத குழந்தைகளைப் பெற்றோர் அடக்குவது வழக்கம். அந்த நகரில் குழந்தைகளைப் பயமுறுத்தும் வழக்கம் இதுதான்.

'இந்தப் பாவி மனிதர் நகைவேழம்பர் எத்தனையோ முறை நள்ளிரவு நேரங்களில் தனியாக இதே வழியாக வருகிறாரே, பூத சதுக்கத்துப் பூதங்கள் இன்னும் இவரைப் புடைத்து உண்ணாமல் ஏன் விட்டுவைத்திருக்கின்றனவோ?' என்று கொதிப்போடு எண்ணினான் அவன். பொற்கடைக்குப் போய் மணிமாலையை விற்பதற்கு முன்னால் யாரும் காணாத் தனிமையில் தான் மட்டும் அதை ஒருமுறை நன்றாக நோக்கி மகிழ வேண்டுமென்று விரும்பினான் ஓவியன். ஆனால் மக்கள் பழக்கமும், நெருக்கடியும் நிறைந்த அந்த நாளங்காடிச் சதுக்கத்தில் அவன் எதிர்பார்த்த தனிமை கிடைக்குமென்று தோன்றவில்லை. சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான் மணிமார்பன். பூதச் சிலையைச் சுற்றி ஓரளவு இருண்டிருந்தது. திருவிழா முடிந்திருந்த நாள் பூதங்கள் இரண்டும் அடுத்த ஆண்டின் திருவிழாவை எதிர்பார்த்து இருளின் அமைதியில் தவம் செய்து கொண்டிருந்தன போலும். இருட்டைப் பிசைந்து இயற்றியவை போலத் தோன்றிக் கொண்டிருந்த அந்தக் கடும் பூதச் சிலைகளின் கீழே மின்மினிப் பூச்சிபோல் ஒரு சிறு விளக்கும் எரிந்துகொண்டிருந்தது. விளக்கைச் சுற்றிலும் பல காரணங்களுக்காக வேண்டுதல் செய்துகொண்டவர்கள் காணிக்கையாக வைத்திருந்த மண் பிரதிமைகள் நின்றன. உடைத்த தேங்காய் மூடியின் உட்புறம் போன்ற கண்களும், கோரப் பற்களும், பயமூட்டும் தோற்றமுமாகச் சூழ்ந்திருந்த இம் மண் உருக்கள் பெரும் பூதத்தைச் சூழ்ந்து படை திரண்ட குட்டி அசுர கணம் போலக் காட்சியளித்தன.

முதலில் ஓவியன் அந்த இடத்துக்குப் போவதற்குப் பயந்தான் என்றாலும் ஆசை வளர்ந்து துணிவாயிற்று. நாளங்காடியைப் போலக் கூட்டம் அதிகமான பகுதியில் நல்ல மனிதர்கள் மட்டும்தான் சூழ்ந்திருப்பார்கள் என்று நினைக்க முடியாது. நல்லவர்களும் இருக்கலாம், கெட்டவர்களும் இருக்கலாம். அப்படிக் கெட்டவர்களும் நல்லவர்களும் கலந்திருக்கும் இடத்தில் பெறுமானமுள்ள பொருளாகிய மணிமாலையை எடுத்துப் பலர் காண நோக்குவது அறிவுக்கு அழகன்று என முடிவுக்கு வந்தவனாகப் பூதச் சிலைக்கு அருகே சென்றான் மணிமார்பன்.

வாடிக் காய்ந்த பூக்களின் வெதும்பிய மணமும் பூதச் சிலையிலிருந்து வழிந்திருந்த எண்ணெய் வாடையுமாக அந்த இடத்துக்குத் தனிச் சூழ்நிலையை நல்கின. தன்னை யாரும் கவனிக்கிறார்களா என்று பார்த்துவிட்டுப் பூதச் சிலையின் கீழே விளக்கின் அடியிலிருந்த மண் பிரதிமைகளுக்கு நடுவே முழந்தாளை மண்டியிட்டு அமர்ந்தான் ஓவியன். சுற்றியிருந்த எல்லாப் பிரதிமைகளின் கோரக் கண்களும், கொள்ளி வாய்களும் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பது போல் அவனுக்கு ஒரு பொய்யுணர்வு தோன்றிக் கணநேரம் மருட்டியது. வேகமாக அடித்துக் கொள்ளும் நெஞ்சுடன் நடுங்கும் கைகளால் மடியிலிருந்து அந்த மணிமாலையை எடுத்து விளக்கருகில் பிடித்தான் அவன். ஒளிக்குலம் முழுதும் ஒன்றுபட்டு வளைந்து ஆரமாகித்

தொங்கினாற் போல் சுடர் வெள்ளம் பாய்ச்சியது அந்த மாலை. மாலையிலுள்ள மணிகள் மின்னும்போதெல்லாம், 'இந்த உலகில் எங்களுக்கு விலை ஏது? விலை கொடுப்பார் தாம் எவர் இருக்கின்றனர்? எங்கு இருக்கின்றனர்?' என்று தன் ஒளி வீச்சுக்கள் முழுவதும் கேள்விகளை நிறைத்துக் கொண்டு மின்னுவது போல் ஓவியனுக்குத் தோன்றியது. 'இவ்வளவு பெரிய பரிசுக்கு நான் தகுதியானவனா?' என்று மறுபடியும் தனது மன எல்லையில் கேள்வி எழுந்தபோது அந்த மாலையின் ஒளிவட்டத்துக்கு நடுவே சுரமஞ்சரியின் பேரழகு முகம் தோன்றி, 'தகுதி என்பது கொடுக்கிறவர்களுக்கு இருந்தால் போதும்' என்று கூறிச் சிரிப்பது போல் ஓவியன் உணர்ந்தான்.

'ஒரு விதத்தில் நான் கொடுத்து வைத்தவன்தான்! காவிரிப்பூம்பட்டினத்துக்கு வந்து சில நாட்கள் துன்பமும், கொடுமையும் அநுபவித்து விட்டாலும் திரும்பிச் செல்லும்போது பெரும் பரிசு பெற்றுச் செல்கிறேன்' என்று நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டான் ஓவியன்.

அப்போது பின்னால் ஏதோ ஓசை கேட்டாற் போலிருந்தது. ஓவியன் மணிமாலையை மறைத்துக் கொண்டு பதற்றத்தோடு திரும்பிப் பார்த்தான். வரிசையாக நிறுத்தியிருந்த மண் பிரதிமைகள் தாம் கண்களை உருட்டி விழிப்பது போல் தோன்றினவே யன்றி வேறு ஒன்றும் தெரியவில்லை. 'தன் மனத்தில் ஏற்பட்ட பிரமையினால் அப்படி ஓசை கேட்டது போல் தானாக எண்ணியிருக்க வேண்டும்' என்று பயம் நீங்கிச் செல்வதற்காக எழுந்தான் மணிமார்பன். மறுபடியும் முன்பு கேட்ட அதே ஓசை கேட்பது போலிருந்தது. நெஞ்சுத் துடிப்பு மேலிட நடுக்கத்துடன் ஓடி விடுவதற்குச் சித்தமாகி அவன் தன் கால்களை வேகத்துக்குரிய நிலைக்குக் கொண்டு வர முற்பட்டபோது பூதச் சிலையின் அடிப்பக்கத்து இருளிலிருந்து யாரோ மெல்லக் கனைப்பது போல் கேட்டது. பயந்தவாறே பார்த்தான்.

அவனுக்குக் கண்கள் விரிந்து வெளிறின. எதிரே யிருந்து பூதப் பிரதிமை ஒன்று குரூரக் கண்களை விழித்துக் கொண்டு கோரவாய் பிளந்து அவனருகே நகர்ந்து வந்து கொண்டிருந்தது. மண் பிரதிமை நடக்குமா? இப்படிப் பயமுறுத்துமா?

அந்தப் பூதம் அருகில் வந்ததும்தான் அதற்கு ஒரே கண் என்பதும் அது நகைவேழம்பர் என்கிற மனிதப் பேய் என்பதும் ஓவியனுக்குப் புரிந்தன. தன் கால்களின் வலிமையை யெல்லாம் ஒன்று திரட்டி ஓட்டமெடுத்தான் மணிமார்பன். அவன் ஓடிய வேகத்தில் தள்ளிய மண் பிரதிமைகள் சில உடைந்தன.

## 8. வல்லவனுக்கும் வல்லவர்

பெருமாளிகையின் வெளிப்புறம் முதல், தலைவாயில் வரை உடன் வந்து ஓவியன் மணிமார்பனை வழியனுப்பி விட்டு உள்ளே திரும்பிச் சென்ற வசந்தமாலை நகைவேழம்பர் ஓவியனைப் பின் தொடரும் செய்தியைச் சுரமஞ்சரியிடம் போய்க் கூறினாள்:

“நடப்பதெல்லாம் நாம் நினைத்ததற்கு மாறாக இருக்கிறது அம்மா! நகைவேழம்பர் மாளிகைக்குள் இல்லையென்று நினைத்துக் கொண்டு இவ்வளவு ஏற்பாடும் செய்தோம். கடைசி விநாடியில் புற்றுக்குள்ளிருந்து பாம்பு புறப்பட்டது போல் இந்த மனிதர் எங்கிருந்தோ வந்து பாய்ந்து விட்டாரே? இனிமேல் என்னம்மா செய்வது? ஓவியர் இவர் கையில் சிக்கிக் கொண்டு விட்டால் நீங்கள் கூறியனுப்பியிருக்கும் செய்தி உரிய இடத்துக்குப் போய்ச் சேராதே?”

இதைக் கேட்டுச் சுரமஞ்சரி அதிர்ச்சியடைந்து உட்கார்ந்து விட்டாள். “இப்படி நடக்குமென்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை, வசந்தமாலை! இந்த மாளிகையில் நினைத்தபடி எந்தக் காரியத்தைத்தான் செய்ய முடிகிறது? ஒவ்வொரு முயற்சியும் தொடங்கும்போதே அதற்கு எதிர் முயற்சியும் எங்காவது ஒரு மூலையிலிருந்து தொடங்கிவிடுகிறதே. நமது முயற்சிகளும், எண்ணங்களும் தோல்வியடைந்து முறியும்போதுதான் நீயும் நானும் நிராதரவானவர்கள் என்பதை நாமே புரிந்துகொள்ள முடிகிறது. இன்று நேற்று ஏற்பட்ட கெடுதல் அல்ல இது. இந்த மாளிகையின் வரலாற்றில் என்றோ, எங்கோ, ஏற்பட்டிருக்கிற கெடுதல் இது. இந்தக் கெடுதலுக்குத் தந்தையாரும் துணையாயிருக்கிறார் என்றே தெரிகிறது.”

சற்றும் மகிழ்ச்சியின்றிச் சலிப்போடு பேசினாள் சுரமஞ்சரி. அவள் சிறிது நேரம் கழித்து வசந்தமாலையையும் அழைத்துக் கொண்டு தன் மாடத்திலிருந்து கீழிறங்கித் தேரில் குதிரைகளைப் பூட்டச் சொல்லிப் பணியாட்களுக்கு உத்தரவிட்டாள். தேர், புறப்படுவதற்குரிய நிலையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது. இருவரும் தேரில் ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள்.

கரமஞ்சரியும், வசந்தமாலையும் இருந்த தேர் மாளிகை வாயிலைக் கடந்து வெளியேறுமுன் பெருநிதிச் செல்வராகிய தந்தையார் சிரித்தபடி விரைந்து வந்து தேருக்குக் குறுக்கே வழிமறித்தாற்போல் நின்றார். கரமஞ்சரி தேரை நிறுத்தி விட்டுக் கோபத்தோடு தன் தந்தையைக் கடுமையாகப் பார்த்தாள்.

"கரமஞ்சரி! நான் எப்போதும் உன் வழியில் குறுக்கிட்டு வந்து கொண்டே யிருக்கிறேன் என்றுதானே இப்படிக் கோபப்படுகிறாய்?"

கேட்டுவிட்டு மர்மமாகச் சிரித்தார் அவர். அவளும் விடவில்லை. கோபத்தில் சுடச் சுடப் பதிலளித்தாள்:

"பிறருடைய வழிகளில் குறுக்கிடாமல் வாழ்வதற்குச் சிலரால் முடியாது அப்பா!"

"அப்படிப் பட்டவர்களில் நானும் ஒருவன் என்பதைத்தானே இப்படிக் குறிப்பாய் மறைத்துச் சொல்ல வருகிறாய்? நல்லது. என் மகள் சாதுரியமாகப் பேசினால் நானும் பெருமை அடைய வேண்டியவன்தானே? ஆனால் நீ சொல்வதைச் சிறிது மாற்றிச் சொன்னால்தான் நான் ஒப்புக்கொள்ள முடியும். நான் என்னொருவனுடைய வழியில் இயல்பாக நடந்து போனாலே அது பல பேருடைய வழிகளில் குறுக்கிடாக முடிகிறது. நான் நடந்து போகிற வழியே அத்தகையதென்பதா, அல்லது வேறு விதமான வழியில் நடந்துபோக என்னால் முடியாதென்பதா, எப்படிச் சொல்வதென்று எனக்குத்தெரியவில்லை, மகளே!"

"எதற்காகப் பேச்சை வளர்க்கிறீர்கள் அப்பா? இப்போது நாங்கள் வெளியே புறப்பட்டுப் போகலாமா, கூடாதா? அதை முதலில் சொல்லுங்கள்."

"போகலாம் கரமஞ்சரி! ஆனால் எங்கே புறப்பட்டுப் போகிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமல்லவா?"

கரமஞ்சரி இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தயங்கினாள். தந்தையார் அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்துச் சிரித்தார்.

"அதனால் என்ன? எங்கே போகிறு வென்று என்னிடம் சொல்ல வேண்டாம். நீ எங்கே போக வேண்டுமானால் போய் விட்டு வா. ஆனால் இந்த இரவு வேளையில் தனியாகப் போக வேண்டாம். இதோ இவனை உங்களோடு துணைக்கு அனுப்புகிறேன்" என்று வாயிற் பக்கம் காவலுக்கு நின்று கொண்டிருந்த ஓர் ஊழியனைக்கூப்பிட்டுத் தேரைச்செலுத்து கிறவனாக அமரச் சொன்னார் அவர்.

உடனே கரமஞ்சரி தேரோட்டியின் இடத்தை அவனுக்காக விட்டு உள்ளே அமர வேண்டியதாயிற்று. தந்தையின் தந்திரமான ஏற்பாடு அவளுக்கு நன்றாகப் புரிந்தது. தன்னுடன் துணைக்கு ஆளனுப்புவதுபோல் தன்னைக் கண் காணிக்கவே அவர் ஏற்பாடு செய்திருக் கிறார் என்பதை அவள் விளங்கிக் கொண்டாள்.

தன் மனத்தில் அவள் நினைத்துக் கொண்டு புறப்பட்ட காரியம் பின் தொடர்ந்து செல்லும் நகைவேழம்பரால் ஓவியனுக்குத் துன்பம் ஏற்பட்டுவிடாமல் தடுக்க வேண்டுமென்பதாயினும் இப் போது அதை மாற்றிக் கொண்டாள்.

"நெய்தலங்கானல் கடற்கரைக்குப் போய்ச் சிறிது நேரம் காற்றாட இருந்து வரலாம்" என்று வசந்தமாலையிடம் சொல்லுவது போல் தேரோட்டுவதற்கு அமர்ந்திருந்தவனுக்கும், தந்தையாருக் கும் நன்றாகக் கேட்கும்படி இரைந்து சொன்னாள் கரமஞ்சரி. 'நெய்தலங் கானல்'—கடற்கரையை நினைத்தவுடன் சிறு வயதில் தானும் வானவல்லியும், தாயுடன் அங்கே சென்று விளையாடிய நாட்களெல்லாம் கரமஞ்சரிக்குத் தோன் றின. மருதநிலம் முடிந்து நெய்தல் நிலம் ஆரம்பமாகும் அழகிய கடற்கரை அது. அங்கே ஒரு பக்கம் தாமரைப் பூக்கள் நிறைந்த குளங்களும், இன்னொரு பக்கம் புதராக அடர்ந்த தாழை மரங்களும், சேர்ந்து காட்சியளிக்கும். நடுநடுவே உப்பங்கழிகள் சிற்றாறுகளைப் போல் மணல் வெளியைப் பிளந்து பாய்ந்து கொண்டிருக்கும். மனத்தில் யாரைப் பற்றியோ, எதைப் பற்றியோ, கவலைப் பட்டுக்கொண்டு, இன்று அந்தக் கடற் கரையின் அழகுகளையெல்லாம் தன்னால் அநுபவிக்க முடியாதே என்று கரமஞ்சரி எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தாள். தேர் சென்று கொண்டிருந்தது.

*   *   *

கரமஞ்சரி எந்த இடத்துக்கோ புறப் பட நினைத்து வேறு எந்த இடத் துக்கோ போக நேர்ந்துவிட்ட அதே இரவில் மருவூர்ப்பாக்கத்தின் குறுகிய தெருக்களில் நகைவேழம்பர் ஓவியனை ஓட ஓட விரட்டிக் கொண்டிருந் தார். ஓவியனுக்கு எப்படியாவது அந்த மனிதப் பேயிடமிருந்து தப்பி விட வேண்டுமென்று தவிப்பு ஏற் பட்டிருந்ததால் அவன் பூத சதுக்கத்திலே தொடங்கிய ஓட்டத்தை இன்னும் நிறுத்தவில்லை. அதேபோல் ஓவியனைப் பிடித்துவிட வேண்டுமென்ற பிடிவாதம் நகைவேழம்பருக்கும் இருந்ததனால் அவர் பின்பற்றித் துரத்துவதையும் நிறுத்த வில்லை. ஏமாற்றி ஏமாற்றி இன்பம்

கண்ட மனமுடைய அவர் எந்த நிலையிலும் தாமே ஏமாந்து போக விரும்பியதில்லை; நேர்ந்ததும் இல்லை. அந்த ஓவியனைத் தப்பவிடுவதற்கு அவர் சித்தமாக இல்லை. அப்படியே தப்பவிடுவதாயிருந்தாலும் அந்த அரும் பெரும் மணிமாலையோடு அவன் தப்புவதை அவர் பொறுத்துக்கொள்ள முடியாது. ஓவியனுடைய போதாத காலமோ என்னவோ நடுவழியில் நகைவேழம்பரோடு அவனைத் துரத்துவதற்கு இன்னும் நாலைந்துபேர் சேர்ந்துகொண்டு விட்டார்கள். அப்படிச் சேர்ந்து கொண்டவர்கள் வேறு யாருமில்லை. மாலையில் இளங்குமரனின் ஓவியத்தோடு அவனைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வருவதற்காகப் பெருமாளிகையிலிருந்து புறப்பட்டுப்போன முரட்டு யவன ஊழியர்களேதான். தற்செயலாக இளங்குமரனைத் தேடி மருவூர்ப்பாக்கத்துப் பகுதிகளில் சுற்றிக் கொண்டிருந்த அவர்கள் இப்போது நகைவேழம்பரோடு சேர்ந்து கொண்டு தன்னைத் துரத்தவே ஓவியன் மிகவும் அச்சம் கொண்டு தலைதெறிக்கிற வேகத்தில் ஆலமுற்றத்தை நோக்கி ஓடலானான். எப்படியாவது படைக்கலச்சாலைக்குள் போய் நுழைந்துவிட வேண்டுமென்பது அவன் வேகத்தின் இலட்சியமாக இருந்தது. படைக்கலச் சாலைக்குள் போய் நுழைந்து கொண்டால் அங்கே



இளங்குமரன் இருந்தாலும், இல்லாவிட்டாலும் தனக்குப் பாதுகாப்புத்தான் என்று எண்ணினான்.

'இளங்குமரன் இருந்தால் அவரிடமே அடைக்கலம் புகுந்து விடுவேன். அவர் இல்லாவிட்டால் அவரைத் தேடி வந்ததாகச் சொல்லி அங்கிருப்பவர்களிடம் அடைக்கலம் புக வேண்டியதுதான்' என்று நினைத்து அவசரமும், அவசியமும் உண்டாக்கியிருந்த சக்தி மீறிய விரைவுடன் முன்னேறிக் கொண்டிருந்தான் மணிமார்பன்.

பின்னால் துரத்திக் கொண்டு வந்தவர்கள் அவனைச் சூழ்ந்து நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

"இருட்டுப் பயலே! இன்று நீ அகப்பட்டால் உன்னை உயிரோடு விடுகிற உத்தேசம் இல்லை. உன்னால் முடிந்தவரை ஓடு. எதிரே இனிமேல் கடல்தான் இருக்கிறது" என்று பின்னாலிருந்து நகைவேழம்பர் சீறுவது ஓவியன் செவிகளில் ஒலித்து அவனை நடுநடுங்கச் செய்து கொண்டிருந்தது. 'இவ்வளவு தொலைவு உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடி வந்த பின்பு இந்தக் கொடுமைக்காரரிடம் அகப்பட்டுக் கொள்வதைப் போல் பேதைமை வேறு இருக்க முடியுமா?' என்று எண்ணி எண்ணி அந்த எண்ணத்தினால் இன்னும் சிறிது நம்பிக்கையை உண்டாக்கிக் கொண்டான் மணிமார்பன். படைக்கலச்சாலையின் வாயில் தென்பட்டதும் அடைத்து மூடியிருந்த அதன் பிரம்மாண்டமான மரக் கதவுகளைப் பார்த்துத் தன் உயிர் தப்புவதற்கு உதவுமென்று தான் நம்பிக்கை கொண்டு வந்த ஆசையின் வழியே அடைபட்டுப் போய்விட்டது போல் பரிதவித்துப் பதைபதைத்து நின்று விட்டான் அவன். அந்தப் பக்கம் ஆலமுற்றத்துக் கோவிலுக்கு அப்பால் அலைபாய்ந்து ஆர்ப்பரிக்கும் கடல். இந்தப் பக்கம் கொல்லப் பாய்ந்து வரும் கொடும் புலிகளைப் போல் எதிரிகள். — எதிரே அடைத்த கதவுகள் — மணிமார்பன் நம்பிக்கை இழந்து விட்டான். அவன் கண்களுக்கு முன்னால் உலகம் முழுவதுமே இருண்டு சுழன்று கொண்டிருந்தது.

அவனுக்கு நினைவு தப்புவதற்கு முன் மிக அருகில் வேகமாக வரும் தேரின் மணிகள் ஒலித்தன. எதிர்ப்பக்கமிருந்து படைக்கலச் சாலையின் வாயிலை நோக்கி ஒரு தேர் விரைந்து வருவதைப் பார்த்தான் மணிமார்பன். தள்ளாடி விழுவதற்கிருந்தவன் தன்னை உறுதிப்படுத்திக் கொள்ள முயன்றான். திருநாங்கூரிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த நீலநாகமறவரின் அந்தத் தேர் நின்றதும் அவர் கீழே இறங்கினார். மணிமார்பன் ஓடிப்போய் அவரருகே நின்று கை கூப்பி, "ஐயா! நான் இளங்குமரனுக்கு மிகவும் வேண்டிய நண்பன். உங்களுக்கு அடைக்கலமாக ஏற்றுக்கொண்டு என்னை இந்தக் கொடுமைக்காரர்களிடமிருந்து காப்பாற்றுங்கள். இவர்கள் இளங்குமரனைச் சிறைப் பிடித்துக் கொண்டு போவதற்காக அவனுடைய ஓவியத்தோடு அவனைத் தேடிக்கொண்டு திரிகிறார்கள். என்னையும் பிடித்துக் கொண்டு போய்க் கொன்று விடலாமெனத் துரத்துகிறார்கள். நல்லவேளையாகத் தெய்வமே வந்தது போல் நீங்கள் தேரில் வந்தீர்கள்." - அவன் மூச்சு இரைக்கப் பதறி நடுங்கிப் போகவதை அநுதாபத்தோடு பார்த்தார் நீலநாகமறவர். அவனைக் கைப்பற்றிக் கூறலானார்:

"நான் உனது தெய்வம் இல்லை, தம்பி! தெய்வம் அதோ, அங்கே ஆலமுற்றத்துக் கோவிலில் இருக்கிறது. உனக்கும், எனக்கும், மிக அருகில்தான் இருக்கிறது."

"ஆனால் நீங்கள் அதைவிட மிகவும் அருகில் இருக்கிறீர்களே, ஐயா!" என்றான் ஓவியன்.

"பயப்படாதே! உன்னையும், என்னையும் போலத் தேடித் தவிப்பவர்களுக்குத் தெய்வம் எங்கிருந்தாலும் மிக அருகில் தான் இருக்கிறது. இதோ நிற்கிறார்களே இவர்களைப் போல் கருணையும், அன்பும் இல்லாத கொடியவர்களுக்குத்தான் அது வெகு தொலைவில் இருக்கிறது" என்று சொல்லி ஓவியனைப் பின்னால் நிறுத்தி விட்டு வளைத்துக் கொண்டாற்போல் முன்புறம் நின்றிருந்த அந்த எதிரிகளை நெருங்கினார் நீலநாகமறவர்.

"உங்களுக்கு என்ன வேண்டும்?"

பெரு மலை நகர்ந்து வந்ததுபோல் முன் வந்து நின்று கொண்டு இப்படிக் கேட்ட அந்தத் தோற்றத்தை நகைவேழம்பரும் அவருடனிருந்த முரட்டு மனிதர்களும் அண்ணாந்து பார்த்தார்கள். நகைவேழம்பர்தான் துணிந்து பதில் பேசினார்:

"உங்களுக்குப் பின் ஒளிந்துகொண்டு அடைக்கலம் கேட்கிறானே, அந்தப் பிள்ளையாண்டான் திருடன். பட்டினப் பாக்கத்துப் பெரு மாளிகையிலிருந்து மணிமாலையைத் திருடிக் கொண்டு ஓடி வந்து விட்டான். அவனை எங்களிடம் விட்டுவிட வேண்டும்."

"நீங்கள் சொல்வதை நான் நம்பவில்லை. இந்தப் பிள்ளையின் பயத்தையும், நடுக்கத்தையும் பார்த்தால் இவனைத் திருடும் தொழிலுக்குத் துணிந்தவன் என்று திருடர்களே ஒப்பமாட்டார்களே? நியாயமாகப் பார்க்கப் போனால் இந்தப் பிள்ளைதான் தைரியத்தை உங்களிடம் திருட்டுக் கொடுத்து விட்டு நிற்கிறான் இப்போது!" என்று கூறிக் கொண்டே நகைவேழம்பருக்கு அருகிலிருந்தவன் கையில் வைத்திருந்த இளங்குமரனின் ஓவியத்தை வலிந்து அவனிடமிருந்து பறித்தார் நீலநாகமறவர். அவன் படத்தை விடாமல் இறுக்கிப் பற்றினான்.

"ஓகோ அவ்வளவு பல மிருக்கிறதா உன் உடம்பிலே?" என்று படத்தை ஓங்கி இழுத்தார் நீலநாகர். படம் கைக்கு வந்தது. படத்தை விட்டுவிட்டு அதிர்ச்சியில் அதை வைத்துக் கொண்டிருந்தவன் தடுமாறிக் கீழே விழுந்தான். நகைவேழம்பர் ஒற்றைக் கண்ணில் சினம் பொங்க, இடுப்பிலிருந்து குறுவாளை உருவிக் கையை ஓங்கிக் கொண்டு நீலநாகர்மேல் பாய வந்தார்.

ஓங்கிய கையை நீலநாகர் தமது இடது கையால் அலட்சியமாகப் பிடித்து நிறுத்தினார். பின்பு மெல்லச் சிரித்துக் கொண்டே ஏக வசனத்தில் வினவிக் கேட்டார்: "அப்பனே! கண்களில்தான் ஒன்றை இழந்து விட்டாய்! உயிரையும் இப்போது இழக்க விரும்புகிறாயா நீ?"

**(தொடரும்)**

# மதராஸ் அலுமினியம் கம்பெனி

பத்து கோடி ரூபாய் மூலதனம் போட்டு ஒரு தொழில் ஆரம்பிக்கப்படுகிறது என்றால் அது பெருமைப்பட வேண்டிய விஷயம். இதைவிடப் பெருமையளிப்பது இத்தனை பெரிய கம்பெனி தனியார்த் துறையில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இம்மாபெரும் மூலதனத்துடன் தொடங்கியிருக்கும் இத்தொழிற்சாலையில் அலுமினியம் உற்பத்தி செய்யப்படும். இரும்புக்கும் எஃகுக்கும் அடுத்தபடி அதிகமாக உபயோகமாகும் உலோகம் அலுமினியம்தான். இதன் உற்பத்தி விலை மற்றெல்லா உலோகங்களின் உற்பத்தி விலையைவிட அதிகம். ஒரு டன் அலுமினியம் உற்பத்தி செய்ய ஏறக்குறைய ரூ. 4000 பிடிக்கிறது. நவீன முறைகள் இடைவிடாது பரிசோதிக்கப்படுகின்றன. இச்சோதனைகளில் வெற்றி கண்டால் உற்பத்தி விலை ரூ. 2500க்குக் குறையலாம்.

மேற்படி மதராஸ் அலுமினியம் கம்பெனியைத் தொடங்கியிருப்பவர் பிரபல கோவைத் தொழிலதிபர் திரு ஆர். வேங்கிடஸ்வாமி நாயுடு அவர்கள். பஞ்சாலைத் தொழிலில் நீண்ட கால அனுபவமுள்ளவர். தென்னிந்திய பஞ்சாலைத் தொழிலதிபர் சங்கத்தின் முன்னாள் தலைவர். 'ஸவுத் இண்டியா விஸ்கோஸ்' என்ற எட்டு கோடி ரூபாய் மூலதனம் கொண்ட கம்பெனியை நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி, வியப்புறும்வண்ணம் உற்பத்தி நிலைக்குக் கொண்டு வந்திருப்பவர். சக தொழிலதிபர்களிடம் செல்வாக்குடையவர். இவற்றுக்கும்மேலாக அரசாங்கத்தின் நன்மதிப்பைப் பெற்றவர். இப்படிப்பட்ட அனுபவசாலி ஆரம்பித்துள்ள ஒரு தொழில் வெற்றி பெறும் என்று நிச்சயமாக நம்பலாம்.

தனித் தொழிலதிபர்களைத் தவிர சென்னை அரசாங்கமும் இத்தொழிலில் கணிசமான அளவுக்கு மூலதனம் முதலீடு செய்திருக்கிறது. உலோகத் தொழிலிலும், ரசாயனத் தொழிலிலும் உலகப் பிரசித்தி பெற்ற மாண்டிகேடினி என்ற இத்தாலியத் தொழில் ஸ்தாபனத்தின் தொழில் நுட்பத் திறனும் ஒத்துழைப்பும், மூலதன முதலீடும் இக்கம்பெனிக்குக் கிடைத்திருக்கிறது.

மதராஸ் அலுமினியக் கம்பெனியின் தொழில் நுணுக்கங்களெல்லாம் இவர்கள் கவனத்துக்கு விடப்பட்டிருப்பது புதிதாகத் தொடங்கியிருக்கும் ஸ்தாபனத்தின் சீரிய வளர்ச்சிக்கு ஒரு நல்ல அறிகுறி. எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமானது இத்தொழிலுக்குள்ள எதிர்காலம். அலுமினியக் கட்டிகள் பாக்ஸைட் என்றகனிப்பொருளிலிருந்து முதல் கட்டத்தில் உண்டாகும் பொருள். இக்கட்டிகளிலிருந்து தகடுகளும், கம்பிகளும், இதர சாமான்களும் செய்துகொள்ள வேண்டும். இப்படி உடனடியாக உபயோகமுள்ள பொருள்களாக மாறும் அலுமினியம் இப்போது ஆண்டுதோறும் 16000 டன்கள் உற்பத்தியாகின்றன. இது அடுத்த ஐந்தாண்டில் இரண்டேகால் மடங்குக்கும் அதிகமாகப் பெருகும்.

இப்படி அமோகமாகப் பெருகும் அலுமினியப் பொருள்களை உபயோகிப்பவர்கள் யார்? தேவையின் அளவு என்ன? என்பதற்கெல்லாம் கணக்கெடுத்திருக்கிறார்கள். கட்டடங்கள், வீட்டுச் சாமான்கள், போக்குவரத்து சாதனங்கள், உணவுப் பொருள்களைப் பாதுகாக்கும் அடைப்பான்கள், மின்சார விஸ்தரிப்புப் பாதுகாப்பு இலாக்கா இவற்றுக்காக இப்போது 44,000 டன் அலுமினியம் தேவைப்படுகின்றது என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். இந்தத் தேவை அடுத்த ஐந்தாண்டுகளில் 80,000 டன், அளவுக்கு அதிகரிக்கும் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். திட்டப்படி தேவை விரிவடையா விட்டாலும், உற்பத்தியாகும் அலுமினியப் பொருள் முழுவதையும் உபயோகித்துக் கொள்ளும் அளவுக்கு இப்போதே தேவை இருக்கிறது. ஆகையால் இந்தத் தொழிலின் எதிர்காலம் திருப்திகரமாக இருக்கும். மதராஸ் அலுமினியம் கம்பெனியார் வருஷத்துக்கு 10,000 டன் அலுமினியக் கட்டிகள் உற்பத்திசெய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள். இதனால் நமது அலுமினிய உற்பத்தி அடுத்த ஐந்தாண்டுகளில் கணிசமாகப் பெருகும். தேசிய அபிவிருத்தியில் தமிழ் நாடு இத்தகைய ஒரு சிறப்பிடம் பெற வழி வகுத்துள்ள திரு வேங்கிடஸ்வாமி நாயுடு அவர்கள் நம் யாவருடைய பாராட்டுக்கும் உரியவராகிறார்.

* * *

இந்தக் கம்பெனியின் தொழிற்சாலை மேட்டூர் அணைக்குச் சுமார் இரண்டு மைல் தூரத்தில் அமையவிருக்கிறது. இங்குதான் மத்திய அரசாங்க உள் துறை அமைச்சர் திரு லால்பகதூர் சாஸ்திரி சென்ற 10-6-61 சனிக்கிழமையன்று இத் தொழிற்சாலைக்கு அடிக்கல் நாட்டினார். ஏராளமான பிரமுகர்களும், தொழிலதிபர்களும், சுற்றுப்புறத்திலுள்ள கிராம மக்களும் திரளாகக் கூடி இவ்விழாவைச் சிறப்பித்தார்கள். அமைச்சர்கள் காமராஜ், வெங்கடராமன், பக்தவத்சலம், எஸ். வி. ராமஸ்வாமி மற்றும், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் திருஅழகேசன், சட்டசபை அங்கத்தினர்கள் திரு வி. ஆர். நரசிம்மன், திரு ரங்கஸ்வாமி நாயுடு முதலிய பலரும் வந்து அங்கே குழுமியிருந்தது இத்தொழில் வளர்ச்சியடைவதில் அவர்களுக்கிருந்த உற்சாகத்தையும் ஆர்வத்தையும் வெளிப்படுத்தியது. இத்தொழிற்சாலைக்கென ஒதுக்கப்பட்டுள்ள 400 ஏக்கர் நிலத்தில் 250 ஏக்கர் நிலத்தைச் சென்னை சர்க்கார் சொல்ப வாடகைக்கு இக்கம்பெனிக்குக் கொடுத்திருக்கிறார்கள். இந்நிலத்தைச் சீர்திருத்திச் சமப்படுத்திக் கட்டட வேலைகள் இப்போதே ஆரம்பித்து விட்டன.

மதராஸ் அலுமினியம் கம்பெனி நிர்வாகத்தினரால் தொடக்கத்தில் காட்டப்படும் உற்சாகமும் ஆர்வமும் கடைசிவரை நீடித்திருக்குமானால் இத்தொழிற்சாலை வெகு வேகமாகப் பூர்த்தியடைந்து உற்பத்தி நிலைக்குச் சீக்கிரமாகவே வந்துவிடும் என்று எதிர்பார்க்கலாம்.

# பேப்பேர் பேப்பேர்

'**கா**ங்கிரஸ் கட்சிக்குப் பக்கவாத்தியம் வாசிக்கத் தகுந்த தினப் பத்திரிகை இல்லை. இதை விரைவில் ஆரம்பிக்க வேண்டும்' என்ற மணியான யோசனையைக் காங்கிரஸ் தலைவர் சஞ்சீவி ரெட்டி சொன்னதும், நாடெங்கும் பரபரப்பு ஏற்பட்டதன் விளைவு:-

எத்தனை பத்திரிகைகள் வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம். அதன் ஆரம்ப விழாவிலோ, ஆண்டு விழாவிலோ கலந்து கொண்டு பேசுவதற்கு நான் இருக்கையில் பயமேன்!

**—ஒரு மந்திரி**

நமக்குத் தெரிந்தாற்போல் மேல் சபையில் நான் வாயைத் திறந்து கேட்ட ஒரே கேள்வியைக் கூட எந்தத் தினசரியும் பிரசுரிக்கவில்லை. நான் கலந்து கொண்ட விழாக்கள் எதையுமே மதித்துப் போடவில்லை. எனவே எங்களுக்குப் பிரசாரம் அளிக்க வரும் நமது கட்சிப் பத்திரிகையை இரண்டு கைகளாலும் வரவேற்கிறேன்.

**—ஒரு எம்.பி.**

ஆளும் கட்சி பத்திரிகை ஆரம்பித்தால் 'நியூஸ் பேப்பர்' கறுப்புச் சந்தையில் தாராளமாக ஒளிந்து கொள்ளும். தாக்குப் பிடிக்க இயலாத இதர கட்சிப் பத்திரிகைகள் விழுந்துவிடும். எதிர்க் கட்சிகளை ஒடுக்க இதைவிட விவேகமான செயல் ஏது?

**—அரசியல் சகுனி**



ஐயா, இந்தியா முழுவதற்கும் 'ஸோல் ஏஜன்ஸி'யை எனக்கே தாருங்கள். நான் இத் தொகுதி எம். எல். ஏ.க்குத் தூரத்து உறவு.

**—சபாநாயகபுரம் மனுதார்.**

தேர்தல் செலவுக்கு நன்கொடை கொடுப்பதற்கு ஏற்ப 'கம்பெனிச் சட்டம்' மாற்றம் அடைந்திருக்கிறது. இனி விளம்பரங்கள் கொடுக்க அஞ்சோம். ஜாம் ஜாம் என்று ஆரம்பியுங்களேன்! ஆனால் எங்கள் கம்பெனிக்குரிய லைசென்ஸ் சலுகைகளை மறக்க வேண்டாம்.

**—காக்காய் & கம்பெனி டைரக்டர்**

பரிசுப் பத்திரத்தைத் திரப்பந்தமாகத் தலையில் கட்டின தழும்பு மாறவில்லை. எப்படியோ சுற்றி வளைத்து உங்கள் பத்திரிகையின் சந்தாத் தொகைச்சுமையையும் ஏற்றி விடாதீர்கள்.

**—ஏழை ஆசிரியர் பீஜி**

திடுக்கிடும் செய்தி வேண்டுமா? அது பெரும்பாலும் உங்கள் கட்சிப் பிரதிநிதிகள் வரலாற்றில்தானே ஐயா இருக்கிறது?

**—ரிப்போர்ட்டர் சங்கடம்**

ஐயா, பத்திரிகையா போடுறீங்க? நம்ம யோசனையைக் காதிலே போட்டுக்குங்க. நல்ல அழுத்தமான வெளியூர் பேப்பரிலே போடுங்க. உள்ளூர்ப் பேப்பர் பொட்டலம் கட்டக்கூட லாயக்கில்லே!

**—பழைய பேப்பர் வியாபாரி**

உங்கள்
டார்ச்சில்
எஸ்ட்ரெலா
பொருத்தி
இரவில்







எஸ்ட்ரெலா

ப்ளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்

ES-6-3 TAM

ISI

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 30. சுந்தர ஏரிகள்

க்ளாஸ்கோ நகரத்தில் நான் தங்கியிருந்த நாட்களில் சுற்று வட்டத்திலுள்ள சில அழகான இடங்களைப் போய்ப் பார்க்க நல்ல வாய்ப்புக்கள் கிட்டின. அந்த அழகான இடங்களிலே இரண்டு, கடற்கரைப் பட்டினங்கள். Gourock என்பது க்ளாஸ்கோவுக்கு மேற்கே இருபத்தாறு மைலில் உள்ள உல்லாச புரி! கடலில் குளிப்பதற்காகவே பல ஆங்கிலேயர்கள் இங்கே செல்கிறார்கள். கோடைக் காலத்தில் ஏராளமான மக்கள் இங்கு தங்குகிறார்கள். ஸ்காட்லாந்தின் அழகை அனுபவிப்பதற்கு இந்தக் கடற்கரைப் பட்டினத்துக்குத் தான் செல்ல வேண்டும்! நீந்திக் குளிப்பதற்காக அமைக்கப்பட்டுள்ள வசதிகள் நாடு முழுதும் புகழ் பெற்றவை!

நான் பார்த்த இன்னொரு வனப்பான இடம் லார்க்ஸ் என்பது. க்ளாஸ்கோவிலிருந்து முப்பது மைலில் இருக்கிறது இந்த இடம். கடந்த நூறு ஆண்டுகளாக இது ஒரு முக்கிய கோடை வாசஸ்தலமாக விளங்கி வருகிறது. பூங்காக்களும் நடன அரங்குகளும் ஆங்கிலேயர்களுக்கு உகப்பான முறையிலே அமைந்திருக்கின்றன. எப்பொழுது பார்த்தாலும் உல்லாசப் படகுகள் மிதந்த வண்ணமாக இருக்கும்! இயற்கையின் எழிலும், அந்த எழிலான இயற்கையிலே நவீன வசதிகளையெல்லாம் செய்து பொருத்தியிருக்கிற நேர்த்தியும் அபாரம்!

இந்த அழகான இடங்களுக்கெல்லாம் என்னை அழைத்துச் சென்றவர் க்ளாஸ்கோவின் செய்தித்துறை அதிகாரி மிஸ்டர் ராம்ஸே! ஹண்டர்ஸ்டன் அணுசக்தி நிலையத்துக்கு அழைத்துச் சென்று அதன் எதிர்காலத் திட்டங்களையெல்லாம் விளக்கினார். க்ளைட் நதியில் ஒரு பிரயாணக் கப்பலில் ஏற்றிச் சென்று, ஸ்காட்லாந்து தேசத்தின் புகழ் பெற்ற கப்பற் கூடங்களையும் எனக்குக் காண்பித்தார்.

க்ளாஸ்கோவிலிருந்து மறுபடியும் எடின்பரோவுக்கு வந்து 'கோச்' மூலம் 'லேக் டிஸ்ட்ரிக்ட்' என்ற எழில் மிக்க மாவட்டத்துக்குச் செல்வதாகத் திட்டம் இட்டிருந்தேன்.

வழக்கத்துக்கு மாறாகச் சூரியன் ஒரே பிரகாசமாகக் காய்ந்து கொண்டிருந்தான். ரயில் வண்டி க்ளாஸ்கோவிலிருந்து எடின்பரோ நோக்கிச் சென்று கொண்டிருந்தது. வெயிலுக்கு ஒரு சுகம் உண்டு என்பதை அப்பொழுது நன்றாக உணர்ந்தேன்.

ஆம்; எப்பொழுதும் ஒரே குளிராக இருக்கிற பிரதேசத்தில் வெயில் அடிக்கும்போது அந்தச் சுகமே தனி! குளிர் காலத்தில் வெந்நீரில் குளிப்பது போல இருக்கிறது அது! சூட்டுக்கு ஒரு சுகமும், கதகதப்புக்கு ஓர் ஆனந்தமும் உண்டல்லவா? அந்த இங்கிதமான வெயில் 'சுள்' என்று கொளுத்தவில்லை. 'கதகத' என்று கணப்பிலே அனல் காய்வதுபோல இருந்தது.

வெதுவெதுப்பான இந்த ஆங்கில வெயிலை அனுபவித்துக் கொண்டே, எடின்பரோ போய்ச் சேர்ந்தேன். விழாவின் சந்தடி சற்று ஓய்ந்திருந்தது. திருவிழாக் கூட்டத்தின் நெருக்கம் இல்லை. ப்ரின்ஸெஸ் வீதியில் செல்லும்போது, கட்டடங்களின் கம்பீரத்தையும் வீதியின் அமைப்பிலே உள்ள அழகையும் நன்றாக நின்று பார்க்க முடிந்தது. வெயிலினூடு ஒரு குளிர்ந்த காற்றும் வீசியதால் அந்த வீதியில் நடந்து செல்வதே இன்பமாக இருந்தது.

ப்ரிட்டனில் என் பிரயாணத்திலேயே மிகவும் சுவையான ஓர் அனுபவம் எடின்பரோவிலிருந்து புறப்பட்ட 'கோச்' யாத்திரை.

எங்களுடைய 'கோச்' வண்டி காலை எட்டு மணிக்கு எடின்பரோ ப்ரின்ஸெஸ் வீதியிலிருந்து புறப்பட்டு, மேற்குக் கடற்கரையோரமாகச் சென்றது. இந்த மார்க்கமாகச் சென்றால், எடின்பரோவிலிருந்து லண்டன் 480 மைல். இந்த நானூற்று என்பது




"இத்தனை வயசுக்கு மேலே வந்து டான்ஸ் கத்துக்கணுமென்கிறேனே என்று யோசிக்காதீர்கள் ஸார்! எனக்கு நல்ல பயிற்சி உண்டு. கடந்த இருபது வருஷமாக என் மனைவி சொன்னபடி யெல்லாம் ஆடிண்டிருக்கேன் நான்!"

மையும் அழகான இயற்கைக் காட்சிகள், கடற்கரைச் சாலைகள், பூங்காக்கள், புல்வெளிகள், எழில்மிகுந்த சோலைகள், வளமான கிராமங்கள், அழகான பட்டினங்கள், சரித்திரப் புகழ் பெற்ற சிற்றூர்கள், ஓடைகள், ஏரிகள், அருவிகள். எங்கு பார்த்தாலும் பசுமை. 'நீர்வளம்' என்றும் 'நில வளம்' என்றும் இரண்டு வார்த்தைகள் அடிபடுகின்றன அல்லவா! அந்த வார்த்தைகளுக்கு விளக்கமாகத் தண்ணீரின் வளமும், நிலத்தின் செழிப்பும் அந்த லே அழகு!

வழியில் ஒரு சிறு கிராமம். அந்தக் கிராமத்தின் முகப்பில் ஒரு செம்மறி ஆட்டின் சிலை நின்றது. இந்தச் சிலையைப் பற்றிக் 'கோச்' பிரயாணிகளிடையே ஒரு ரசமான சர்ச்சை நடந்தது.

இந்தச் செம்மறியாட்டின் சிலையைச் செய்த சிற்பி, நீண்ட காலமாக முயன்று இதைச் செய்து திருத்தினானாம். திறப்பு விழாவெல்லாம் சிறப்பாக நடந்து முடிந்ததாம். ஆனால் அதன் பிறகு என்ன நேர்ந்தது? அந்த அற்புதமான செம்மறியாட்டின் சிலையைக்கூர்ந்து பார்த்த ஒரு பெருமகன் விறுவிறு என்று சிற்பியை நோக்கி நடந்து வந்தான். "ஐயா, சிற்பியாரே! எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டீர்! உம்முடைய செம்மறியாட்டுக்குக் காது இல்லையே!"

இவ்வாறு கூறினார் ஸ்ரீமான் பொதுஜனம்! "அடாடா!" என்று கைகளை உதறினான் சிற்பி! ஆமாம், செம்மறியாட்டுக்குக் காது களை வைக்க மறந்து விட்டான் சிற்பி!

இந்தத் தவற்றினால் என்ன நிகழ்ந்தது என்று நினைக்கிறீர்கள்? தனது வாழ்நாளிலேயே மிகப் பெரிய இலட்சியமாகக் கருதி இரவும் பகலும் உழைத்த சிற்பி, தனது சிலையிலே இவ்வளவு பெரிய குறை நேர்ந்து விட்டதே என்று வருந்தினான். அந்தத் துயரையும் அவமானத்தையும் அவனால் தாங்க முடியவில்லை. தற்கொலை செய்து கொண்டு விட்டான்!

இந்தக் கதையை என்னிடம் சொன்னார், என்னோடு 'கோச்'சிலே வந்த ஒரு சகபிரயாணி; அவர் லண்டனைச் சேர்ந்த ஆங்கிலேயர். சிலையை நன்றாகப் பார்த்தேன். மிகவும் அழகாக இருந்தது. செம்மறியாட்டின் உடம்பெல்லாம் ரோமம் அடர்ந்திருந்ததை மிகுந்த அழகோடு செய்திருக்கிறான் சிற்பி!

"நண்பரே! நன்றாகக் கூர்ந்து பாருங்கள்! செம்மறியாட்டின் காதுகள் அந்த அடர்த்தியான ரோமத்துக்குள்ளே மறைந்து கொண்டிருக்கின்றன!" என்றேன். நண்பர் உற்றுப் பார்த்துவிட்டு, 'எங்கே?' என்று கேட்டார் மறுபடியும்! "அடர்த்தியான ரோமம் அல்லவா! அதனால் நம்முடைய கண்ணுக்குத் தெரியாமல் காதுகள் இரண்டும் ரோமத்துக்குள்ளே மறைந்து கொண்டிருக்கின்றன!" என்று சொன்னேன்.

"ரொம்ப சரி! அது தான் உண்மை. இவர் சொன்ன கதை யாரோ புனைந்துவழங்கிய பொய்க் கதை! காதுகளைவெளியே தெரியும்படி காட்டாமல் விட்டதுதான் இந்தச் சிலையின் அழகுக்கு முக்கிய காரணம்!" என்றார் என் பக்கத்திலிருந்த இன்னொரு பிரயாணி. அவர் ஸ்காட்லாந்துக்காரர்!

இவ்விதமாக அழகும், சரித்திரமும், கலையும் ஒன்றோடொன்றுபோட்டி போட்டுக் கொண்டு நிற்கிற இடங்களைக் கடந்து சென்றது எங்கள் 'கோச்.'

ஸ்காட்லாந்து எல்லையிலே, இங்கிலாந்தைப் பிரித்துக்கொண்டு ஓடுகிற நதியின் கரையிலே ஒரு கொல்லர் பட்டறை இருக்கிறது. எங்கள் கோச் வண்டி இந்த இடத்தில் வந்துநின்றது. நாங்கள் பட்டறைக்குள்ளே சென்றோம்.

'பழைய கொல்லர் பட்டறை' என்ற இந்த இடம் 1850ம் ஆண்டுவரை மிகவும் முக்கியம் வாய்ந்த ஒரு 'மணவறை'யாக விளங்கிற்றாம்! தாய் தகப்பன்மாரிடம் அனுமதி பெறாமல் வீட்டை விட்டு ஓடிவந்த இளம் காதலர்கள் இங்கே சென்றுதான் தங்கள் திருமணத்தை முடித்துக்கொள்வது வழக்கமாம். திருமணம் நடைபெற்று வந்த சடங்கு அறையும், மற்றச் சம்பிரதாயப் பொருள்களும் இன்றும் அங்கே காட்சியாக வைத்திருக்கிறார்கள். "அந்தக் காலத்தில் தப்பி வந்த காதலர்கள் எப்படித் திருமணம் செய்து கொண்டார்கள் தெரியுமா?" என்று கேட்டார் அந்தப் பட்டறையின் நிர்வாகி. இப்படிக் கேட்டுக் கொண்டே எங்களுக்கு அருகிலே வந்தார். எங்கள் கோச்சில் எங்களோடு வந்த ஒரு கிழவரையும் அவருடைய மனைவியையும் கையைப் பிடித்து அழைத்துச் சென்று சடங்குக் கூடத்திலே நிறுத்தினார். "நான் சொல்வதை நீங்கள் திருப்பிச் சொல்ல வேண்டும்" என்று கூறிக் கீழ்க்கண்டவாறு சொல்ல ஆரம்பித்தார்:—

"பெற்றோர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் ஓடி வந்துவிட்ட வாலிபனாகிய நான், பெற்றோர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் ஓடி வந்துவிட்ட யுவதியாகிய இந்தக் காதலியைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதிக்கிறேன்....!"

# கடன் வாங்காத கல்யாணம்






















# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர்
## ஹேர் ஆயில்

**எக்கானமி சைசை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

---

# ஸ்பென்ஸர் அளிக்கும் சேவை

C A Q

## சீதளம், ஜலதோஷம், தலை வலி
## ஜுரம் முதலியவைகளுக்கு

# C.A.Q

REGD. TRADE MARK

## கேள்வியும் சந்தேகமும் வேண்டாம்

திரவ மருந்தாகவும், கேப்ஸுலாகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்

சி. ஏ. க்யூ. ஒன்றே. அதை தயாரிப்பவர் ஸ்பென்ஸரே

## ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்

மதராஸ் :: பம்பாய் :: கல்கத்தா : டில்லி மற்றும் கிளைகள்

இவ்வாறு கிழவனூர் சொல்லி முடித்ததும், அவருடைய மனைவிக்கு வெட்கம் தாங்க முடியவில்லை. அந்தக் கிழவியம்மாள் சிரித்துச் சமாளிக்க முயன்றார். ஆனாலும் அந்த அம்மாளையும் விடவில்லை பட்டறை நிர்வாகி.

"நீங்கள் சொல்லுங்கள்! தாய் தகப்பனாரிடம் சொல்லிக் கொள்ளாமல் ஓடிவந்துவிட்ட இளங்காளையாகிய இந்த வாலிப அழகனை, அம்மாவிடம் சொல்லாமல் தப்பி வந்துவிட்ட மணப்பெண்ணாகிய நான் திருமணம் செய்து கொள்ளச் சம்மதிக்கிறேன்."

கிழவி அம்மாள் இந்த வார்த்தைகளைச் சொன்னதும், கிழவரும் மனைவியும் கைகோத்துக் கொண்டு நின்று மோதிரம் போட்டது 'கோச்' பிரயாணிகள் அனைவரையும் ஒரே குதூகலத்தில் ஆழ்த்தியது!



எடின்பரோ பிரின்ஸெஸ் வீதி

இந்தத் திருமணக் கூடத்திலிருந்து புறப்பட்டுக் கவிஞர்கள் பலர் பிறந்து வளர்ந்து உலவிய சுந்தர எல்லைக்குள்ளே சென்றோம். எங்கள் கோச் பசுமையான புலவெளிகளுக்கு மத்தியிலே நேர்த்தியான சாலையிலே சென்று கொண்டிருந்தது. வலது புறம் மலை. இடது புறம் மலை. எதிரே தொலைதூரத்தில் வான முகட்டைத் தொட்டுக்கொண்டு நின்ற மலைச் சிகரங்கள்! அங்கங்கே சிறு சிறு அருவிகள்! பாடிக்கொண்டே ஓடிவரும் ஒய்யாரச் சிற்றோடைகள்! என்ன அழகு! என்ன அழகு! இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையிலே கவிஞர்களும் கவிதைகளும் பிறந்ததில் ஆச்சரியம் என்ன?

"லேக் டிஸ்ட்ரிக்ட்" என்ற பிரதேசம் முப்பத்தைந்து சதுர மைல் பரப்புள்ள ஒரு மாவட்டம். ஏறக்குறைய பன்னிரண்டு பெரிய ஏரிகள் இங்கே இருக்கின்றன. இந்தப் பன்னிரண்டில் மிகவும் பெரிய ஏரி Windermere என்பது. சுமார் பத்து மைல் நீளமும் ஒரு மைல் அகலமும் கொண்டது.

ஏரிகளைச் சுற்றி மலைகள். எங்கு பார்த்தாலும் அருவிகள். தெள்ளத் தெளிந்த நீரோடைகள். கரும்பைச் சாறு பிழிந்து ஓடவிட்டது போலத் தண்ணீர்! வார்ட்ஸ்வர்த், டிக்வின்ஸி, ஸதே, கால்ரிட்ஜ், ஹாஸ்லிட், சார்ல்ஸ் லாம்ப், ஜான்ரஸ்கின் ஆகிய பெரிய பெரிய கவிஞர்களும் எழுத்தாளர்களும் நடமாடிய பூமி அது! ஆங்கில இலக்கியத்தோடு தொடர்புள்ளவர்களுக்கு அந்த மாவட்டத்திலேயுள்ள ஒவ்வொரு கல்லும் புல்லும் ஓடையும் நதியும் ஒவ்வொரு கதையைச் சொல்லுகிறது. கால வெள்ளத்தை எதிர்த்து நீந்தித் தங்கள் அமரத்தன்மையை நிலைநாட்டியுள்ள ஆங்கிலப் புலவர்களின் சிறப்பை அந்த நதிகள் பாடுகின்றன; அங்கேயுள்ள பறவைகள் பேசுகின்றன!

இப்படிப்பட்ட இயற்கை வளப்பும், இலக்கிய மணமும் நிரம்பிய மாவட்டத்தில் இரண்டு நாட்கள் சுற்றிவிட்டுக் 'கோச்'சிலேயே லண்டன் நோக்கிப் புறப்பட்டேன்! இந்தப் பிரயாணத்தில்தான், 'ஆக்ஸ்போர்ட்' எல்லையை அடையும்போது எங்கள் கோச் வண்டி ஒரு விபத்துக்கு உள்ளாயிற்று! மலைகளையும், சரிவுகளையும் வேகமாகக் கடந்து வந்துவிட்ட வண்டி, ஆக்ஸ்போர்ட் எல்லையிலே ஒரு வளைவு வளைந்து திரும்பியது. எதிரே ஒரு சிறிய மோட்டார் வண்டியில், ஓர் ஆங்கிலேய இளைஞர் மிகவும் வேகமாக வந்து கொண்டிருந்தார். என்ன வேகமோ தெரியாது! எதிரே 'கோச்' வருவதைப் பார்த்ததும் காரை ஓர் ஓடி ஒடித்தார். 'படார்' என்று எங்கள் கோச் வண்டியின் முகப்பிலே மோதி அந்த அதிர்ச்சியிலே வளைந்து சென்று, நடைபாதைக்கு அருகிலே நிறுத்தியிருந்த இன்னொரு காரிலே மோதிற்று அந்த இளைஞரின் வண்டி. சிறிய வண்டி!

டப்பாக்கள் பொளிந்து போவதைப் பார்த்திருக்கிறோம் அல்லவா! அப்படிப் பொளிந்து போய் விட்டது அந்தச் சிறிய கார்! ஆச்சரியம் என்னவென்றால் அதை ஓட்டிக் கொண்டு வந்த இளைஞர் எவ்வித அடியும் இல்லாமல் தப்பித்து விட்டார்! நடைபாதையிலே நின்ற மற்றொரு காருக்குள் மனிதர் யாருமில்லை. சொந்தக்காரர் தம்முடைய நாயை அந்தக் காருக்குள் வைத்து விட்டுக் கீழே இறங்கி எதிர் வீட்டுக்குள் சென்றிருந்தார். சிறிய கார் வந்து மோதின வேகத்தில், அந்த அதிர்ச்சியில், காருக்குள்ளே இருந்த நாய் அப்படியே 'வெல வெலத்'துப் போய் நீண்ட நேரம் உடம்பெல்லாம் பதறிக் கொண்டேயிருந்தது! யாருக்கும் எவ்விதச் சேதமும் இல்லையென்றாலும், விபத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சி எல்லாரையும் பலமாகத் தாக்கி விட்டது.

அன்று பிற்பகல் ஆக்ஸ்போர்டில் தங்குவதாக எண்ணியிருந்தோம். இந்த விபத்து காரணமாக, அதிகாரிகள் வந்து விசாரணையெல்லாம் நடத்தி முடிய நீண்ட நேரம் ஆயிற்று! இதன் பிறகு நேரே லண்டனை நோக்கி வந்து விட்டோம். லண்டனிலிருந்து விமானம் மூலம் ஐரோப்பா செல்ல வேண்டும் என்று ஏற்பாடு செய்திருந்தேன். (தொடரும்)

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய சேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருந்து, உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் சேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்...வசீகரமும்
தரும் மணமுடையது

PALMOLIVE
*Lavender*
TALC POWDER

**டீ லக்ஸ்**
17 மயக்கும் ஸெண்டு
களின் அற்புதக் கலவை

PALMOLIVE
*Talcum Powder*
DE LUXE

# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PTA-5 T.

# திருமோகூர்க் காளமேகர்

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து என்பர். பத்துக்கு மேலும் எடுத்த அவதாரங்கள் உண்டு. அதில் சிறப்பானது மோகினி அவதாரம். இந்த அவதாரத்தை இரண்டு தரம் எடுத்திருக்கிறார் அவர். ஒரு தடவை தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை அடக்க. மற்றொரு தடவை அமிர்தம் கடைய வந்த அசுரர்களை வஞ்சிக்க. இரண்டுமே சுவையான கதைகள்தாம். தாருகா வனத்து ரிஷிகள் கல்வி கேள்விகளில் வல்லவர்கள். வேதங்களை ஓதி ஓதி நிரம்ப அறிவைப் பெறுகிறார்கள். அவர்களது அறிவோடு வளர்கிறது ஆணவமும். தம்மைப் படைத்த தலைவனும் இறைவனையே மறக்கிறார்கள். இறை உணர்ச்சியே இல்லாதவர்களாக வாழ்கிறார்கள்; இவர்களது ஆணவத்தை அடக்கப் புறப்படுகிறார் இறைவன் பிக்ஷாடனக் கோலத்தில். இந்த அழகிய பிக்ஷாடனனது கோலத்தைக் கண்டு ரிஷிபத்தினிகள் மயங்குகிறார்கள், நிறை அழிகிறார்கள். முனிவர்களது கர்வத்தை அடக்க இறைவன் தம் மைத்துனரான விஷ்ணுவையே அழைத்திருக்கிறார். அவரும் வருகிறார், நல்ல மோகினி வடிவிலே. இந்த மாய மோகினியை முனிவர்கள் பின் தொடருகிறார்கள். ஆணவம் அழிகிறது, அகந்தை ஒழிகிறது. இப்படி ஒரு வெற்றி இறைவனான சிவபெருமானுக்கு, மோகினி வடிவில் வந்த தம் மைத்துனர் மூலமாக.



மன்மதன்

அடுத்த தடவை மோகினி வடிவம் எடுத்தது இதைவிடச் சுவையானது. பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்து அருந்தினால் அமரர்கள் ஆகலாமெனத் தேவர்கள் நினைக்கிறார்கள். பாற்கடல் கடையத் தங்களால் மாத்திரம் இயலாதென்று, அசுரர்களையும் உடன் சேர்த்திருக்கிறார்கள். அவர்களுக்கு அமுதத்தில் பங்கு கொடுக்க இசைந்திருக்கிறார்கள். சும்மாவே துன்புறுத்தும் அசுரர் அமிர்தத்தை வேறு சாப்பிட்டு விட்டார்கள் என்றால் கேட்பானேன்? ஆதலால் பாற்கடல் கடைந்து அமுதமெடுத்த உடன் தேவர்கள் அசுரர்களுக்கு உரிய பங்கைக் கொடுக்க மறுத்திருக்கிறார்கள். அசுரர்களோ விடுவதாக இல்லை. இந்த நிலையில் தேவர்கள் விஷ்ணுவிடம் முறையிட்டிருக்கிறார்கள். விஷ்ணு மோகனமான மோகினி வடிவத்தில் வந்திருக்கிறார். இருவருக்கும் அமுதத்தைத் தாமே பங்கிட்டுத் தருவதாகக் கூறியிருக்கிறார். அப்படியே அமுதத்தைப் பரிமாறவும் முனைந்திருக்கிறார். தேவர்கள் பக்கம் வரும்போதெல்லாம் தாராளமாய் வாரி வழங்கிவிட்டு, அசுரர்கள் பக்கம் போகும்போது ஆடிப் பாடி அவர்களை மயக்கியிருக்கிறார், அமிர்தத்தைக் கொடாமலேயே. கடைசியிலே அமிர்தம் காலியாகிவிடுகிறது ஒரு துளி கூட அசுரர்கள் பெறவில்லையே. இப்படி அசுரர்களை ஏமாந்த சோணகிரிகளாக்க எடுத்திருக்கிறார் ஒரு தடவை மோகனாவதாரம். இந்த மோகனாவதாரம் எடுத்த தலம்தான் மோகனூர். அதுவே மோகூர் என்று குறுகியிருக்கிறது. அந்தத் திருமோகூருக்கே செல்கிறோம் நாம் இன்று.

திருமோகூர், மதுரைக்கு வடக்கே ஏழு எட்டு மைல் தொலைவில் இருக்கிறது. மதுரை மேலூர் ரோட்டில் ஒத்தக் கடை வரை நல்ல சிமெண்ட் ரோட்டில் போய் அதன் பின் கிழக்கே திரும்பி ஒரு மைல் சென்றால் திருமோகூர் போய்ச் சேரலாம். கோயிலைச் சுற்றி நாலுபுறமும் வயல்களும் தடாகங்களும். 'தான் தாமரை தடம் அணி வயல் திருமோகூர்' என்று தானே நம்மாழ்வார் இத்தலத்தைப் பாடியிருக்கிறார்; கோயிலைச் சுற்றி நீண்டுயர்ந்த மதில் அழகு செய்கிறது. கோயிலுக்கு வடக்கு மதிலுக்குப் பக்கத்திலே புஷ்கரணி. அதில் தாமரை மலர்கள் மலர்ந்திருக்கும். இதையெல்லாம் பார்த்துக் களித்த பின்னரே கோயிலுள் செல்லலாம். கோயில் பெரிய கோயில். கிழக்கு வாயிலைத் தாண்டி



கேதகி விமானம்

யதும் கம்பத்தடி மண்டபம். அங்குதான் இக்கோயிலைத் திருப்பணி செய்த சிவகெங்கைச் சீமை பாளையக்காரர்களான சின்ன மருது, பெரிய மருது இவர்களின் சிலைகள் இருக்கின்றன. பெரிய மருது கட்டிய கோபுரத்தைத்தான் காளையார் கோயிலில் பார்த்திருக்கிறோமே. அங்கேயே வடபுறம் க்ஷீராப்தி நாதர் சந்நிதி வேறே. அடுத்த வாயிலையும் கடந்து சென்றால் கருட மண்டபம் வந்து சேருவோம். அங்கு மூன்று நான்கு நல்ல சிலைவடிவங்கள் தூண்களில் இருக்கின்றன. சீதாப் பிராட்டியை அணைத்த வண்ணம் நிற்கும் ராமன் ஒரு தூணில். அதனை அடுத்து லக்ஷ்மணன் ஒரு தூணில். இவர்கள் தவிர மன்மதன் ரதி முதலியவர்கள் வடிவங்கள். இவர்களுக்கிடையில் ஒரு சிறு கோயிலில் பெரிய திருவடியான கருடாழ்வார் நிற்கிறார். இனி மகாமண்டபத்தைக் கடந்து அர்த்த மண்டபத்துக்குச் செல்லலாம். அங்கிருந்து பார்த்தால் காளமேகப் பெருமாள் என்னும் மூலவர், தேவியர் இருவரோடும் நின்ற கோலத்தில் சேவை சாதிப்பார். கம்பீரமான வடிவம். இந்தக் காளமேகப் பெருமாளையே கவி காளமேகம்,

பொன்னனைய அரக்கன் ஐந்நூற்றுவரைக்
  காவை, பொரு சிலையைக்
    கனைகடலைப் பொன்னான் ஈன்ற
நன்மகற்காய் சுரர்களில்
  ஐவருக்காய், காதல் நப்பின்னைக்காய்
    நடவைக்காக
மன்னுயிரால் வடிக்கணையால்
  வளையால், புள்ளால் வயங்குதோள்
    வலியால் வானரங்களாலும்
மூன்றுடல் கீறிச் சிரங்கொண்டு
  அம்பில்வீழ்த்தி முதலொடும் கொண்டு
    இருத்தசைத்த மோகூரானை

என்று அவன் பிரதாபங்களையெல்லாம் விரிவாகச் சாங்கோபாங்கமாகவே பாடியிருக்கிறார். இக்கோயிலிலேயே 'படங்கொள் பாம்பணைப் பள்ளி கொள்வான் திருமோகூர்' என்று நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்தபடி புஜங்க சயனராய்ப் பள்ளி கொண்டிருக்கும் கோலமும் இருக்கிறது. இத்தனையைக் கண்டாலும் நமக்கு, அந்த மோகினியான மோகன வடிவத்தையே காணும் ஆவல் மிஞ்சி நிற்கும். இந்த ஆவலைத் தீர்க்க அங்கு மூர்த்தியோ அல்லது சிற்ப வடிவமோ இல்லை. ஆனால் இந்த மோகன வடிவத்தைக் கண்டுதான் ஆகவேண்டும் என்றால் மாயூரம் பக்கத்திலுள்ள வழுவூர் வீரட்டேசுரர் கோயிலுக்கு ஒரு நடைகட்ட வேண்டியதுதான். அங்கு காமரூபிணியாக இருக்கும் மோகினியைக் காணலாம். இங்கு தாயாருக்கு ஒரு சந்நிதி உண்டு. தாயாரின் திருநாமம் மோகனவல்லி. இந்த மோகனவல்லி அந்த மோகனவண்ணனுடன் போட்டிபோடக்கூடிய அழகு வாய்ந்தவளாக இல்லை. இக்கோயில் கருவறையின்மீது உள்ள விமானமும் கேதகி விமானம் என்னும் சிறப்பான விமானம். கோயிலுக்கு வெளியே பெரிய பாறையில் பன்னிரண்டு திருக்கரங்களுடன் சக்கரத்தாழ்வார் செதுக்கப்பட்டிருக்கிறார். பெரிய சக்கரமும் அதன் நடுவில் சுதர்சன ஆழ்வாரும் உருவாகியிருக்கிறார்கள். சக்கரத்தாழ்வார் விரைவாகச் செல்லும் பாணியில் இருக்கிறார்.

இத்தலம் புராணப் பிரசித்தி மாத்திரம் உடைய தலம் அல்ல, மதுரைக் காஞ்சி என்ற பழைய சங்க இலக்கியம், மோகூர் அவையகம் விளங்கக் கோசர் வந்து பழையனுக்கு உதவி செய்ததைக் குறிக்கிறது. மௌரியர், வடுகரை முன்னுறவிட்டுத் தென் திசைமேல் படையெடுத்து வந்தபோது மோகூர் அவர்களுக்குப் பணியாமல் நின்றிருக்கிறது. மோகூருக்குத் துணையாகக் கோசர் ஆலம்பலத்தில் தோன்றிப் பகைவரைச் சிதைத்தனர் என்றும் கூறும். மோகூர்ப் பழையனைச் செங்குட்டுவன் வென்று அவன் காவல் மரமாகிய வேம்பைத் தடிந்தான் என்று பதிற்றுப் பத்துக் கூறும். இதனால் மௌரியர் காலத்துக்கு முன்னமேயே மோகூர் பழம் பெருமையுடன் சிறப்புற்றிருந்தது என்பது தெளிவாகும். கிரேக்க வானசாஸ்திரியான டாலமி மோகூரைப் பற்றித் தம் பூகோளப் படத்தில் குறித்திருக்கிறார் என்றால் அதிகம் சொல்வானேன்? இக்கோயிலிலே இடைக்காலக் கல்வெட்டுகள் நிறைய இருக்கின்றன. தென்பறம்பு நாட்டின் ஒரு பகுதியாக மோகூர் விளங்கியிருக்கிறது. பறம்பு நாடு பாரியின் நாடு. மோகூரில் பழையன் என்பவனது பலத்த கோட்டை இருந்திருக்கிறது. 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நாயக்க மன்னர்கள் ஆட்சியில் இக்கோயில் கோட்டையாக உதவியிருக்கிறது. கோயில் குடி, திரும்பூர் என்றெல்லாம் வழங்கியிருக்கிறது. கர்நாடக யுத்தத்தின்போது முகம்மது அலி ஹீரான் என்பவன் தலைமையில் மதுரையைக் கைப்பற்ற ஒரு படையை அனுப்பினான் என்றும், மதுரை கவர்னர் திருமோகூர் சென்று ஒளிந்து கொண்டான் என்றும் சரித்திர ஏடுகள் கூறும். ஹீரான் மோகூர் ஆலயத்தை முற்றுகையிட்டு ஆலயத்துள் புகுந்து பொன்னையும் பொருளையும் கொள்ளையடித்திருக்கிறான். கோயில் ஸ்தானீகர்களான கள்ளர் குலமக்கள் ஹீரானின் படைகளை விரட்டி அவர்கள் கைப்பற்றிய பொருள், விக்கிரகங்களையெல்லாம் மீட்டிருக்கின்றனர். இவ்வளவு சரித்திரப் பிரசித்தியுடனும் விளங்குவது இக்கோயில்.



# நீர்த்தேக்கங்களுக்கு மறு ஏற்பாடு தேவை

## எப்படிச் செய்கிறார்கள் ?

பாலைவனத்தில் செல்லும் ஒட்டகம் நீர்த்தேவைக்கு ஓயஸிஸ்(பாலைவனச்சோலை) தன்னை நம்பலாம். பிற நீர்ப் பிரச்னைகள் பலவற்றை மையர்ஸ் அல்லது வாஸ்ப் பம்பிங் திட்டங்கள் எளிதில் தீர்க்கின்றன. வளரும் நம் நாட்டின் அனுபவம் மிக்க திட்டங்கள் இவை.

**MYERS OR WASP**

**மையர்ஸ்** அல்லது **வாஸ்ப்**

**சுயமாய் இயங்கும்** பம்பிங் திட்டங்கள்



தொழில்களுக்கான பம்பிங்: திரவ சம்பந்தமான எவ்வித பம்பிங் பிரச்னைகளுக்கும் திறமை மிக்க ஆலோசனைக்கும் உதவிக்கும் எங்களை அணுகுங்கள்.

ஆழ் கிணறு பம்பிங் எங்கள் விசேஷ அம்சம்.

**வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் ப்ரை. லிட்.,**

330, தம்பு செட்டித் தெரு, சென்னை-1



# ஒளி

**சாந்தி**



மாலை நேரம். சூரியன் மலைவாயில் விழுந்து கொண்டிருந்தான். தெருவில் போவோரும் வருவோருமாகச் சந்தடி அதிகமாயிருந்தது. எதையும் பொருட்படுத்தாதவர் போல் அந்தப் பெரியவர் தம் வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். நேரம் சாரைப் பாம்பு போல் சரசரவென்று ஊர்ந்து சென்றது. எண்ணக் குவியல்களிடமிருந்து தம்மை விடுவித்துக் கொண்டவாறே அந்தக்கிழவர் தம் கண்களை அலங்கரித்த கறுப்புக் கண்ணாடியைக் கழற்றி விட்டு அண்ணாந்து பார்த்தார். சிவப்புக் குளங்களாக இருந்த நேத்திரங்கள் மாலை நேரத்தின் மங்கிய வெளிச்சத்தைக் கூடத் தாங்கமாட்டாமல் கூசின. 'சே! ஆனாலும் இந்த வேதனையைத் தாங்க முடியவில்லை. இந்தக் கண் இரண்டையும் பிடுங்கி எறிந்து விட்டால்தான் என்ன?' எனச் சலித்தவாறே கிழவர் மறுபடியும் கண்ணாடியை அணிந்து கொண்டார்.

வாசலில் சைக்கிள் மணி அடித்தது. "யாரடா அது?" எனக் கேட்டவாறு அவர் தம்மால் இயன்றவரையில் கண்ணாடி வழியே உற்றுப் பார்த்தார். மங்கலாகத் தெரிந்தது அந்த உருவம்.

"நான்தான், அப்பா!" என்ற வெண்கலக் குரல் அவர் பிள்ளை ராமுவின் வரவை ஊர்ஜிதப்படுத்தியது.

"ராமு, கண் டாக்டரைப் பார்த்தாயா? என்ன சொல்லுகிறார் அவர்?" எனக் கேட்டவாறு புடவைத் தலைப்பில் ஈரக் கையைத் துடைத்தவண்ணம் உள்ளிருந்து வந்தாள் பெரியவரின் மனைவி விசாலம்.

"ஆபீஸிலிருந்து வரும் வழியில் டாக்டர் சிவகுமாரைப் பார்த்தேனம்மா! அப்பாவின் கண் ஆபரேஷனை அடுத்த மாதம் முதல் வாரத்தில் வைத்துக் கொள்ளலாமென்றார்" எனக் கூறிவிட்டு ராமு சைக்கிளைத் தூக்கி வந்து தாழ்வாரத்தின் ஓரமாக வைத்து விட்டுப் பூட்டினான்.

"அடுத்த மாதமா? ஏன் தள்ளித் தள்ளிப் போடுகிறார் இப்படி? சே! கண் தெரியாமல் என்ன வாழ்வு இது? இப்படிக் குருட்டுப் பிண்டமாக எல்லோருக்கும் பாரமாக இருப்பதைவிட..." கிழவர் வாக்கியத்தை முடிக்காமல் திணறினார். அவருக்கு நெஞ்சு அடைத்தது. உணர்ச்சி மிகுதியால்.

"இந்த வயசில் கண் கொஞ்சம் தெரியவில்லையென்றால் தான் என்ன? ஆபரேஷன் ஆபரேஷனென்று அடித்துக் கொள்கிறீர்களே! அடிநாளிலெல்லாம் ஓடி ஓடி உழைத்தாகி விட்டது. இனி உட்கார்ந்துதான் சாப்பிடுங்களேன். யார் உங்களை ஏனென்று கேட்கப்போகிறார்கள்? உட்கார வைத்துச் சாப்பாடு போடப் பிள்ளை குட்டி இல்லாவிட்டால்தான் இப்படிப் பறக்கணும். உங்களுக்கென்ன? எதில் குறைவு? பேசாமல் வேளா வேளைக்குச் சாப்பிட்டுவிட்டுச் சிவனேயென்று ராம நாமத்தை ஜபிப்பதை விட்டு விட்டு, இப்படிக் கண் தெரியவில்லை என்று ஊரைக் கூட்டுகிறீர்களே?" என்று கேட்டுக் கேட்டுப் புளித்துப்போன பழைய பல்லவியை அவரிடம் பாடினாள் விசாலம்.

"உனக்கென்ன தெரியும், நான் படும் அவஸ்தை! திண்ணையோடு திண்ணையாக ஜடம்மாதிரி இருக்கச் சொல்லுகிறாயே? நீ அப்படி இருந்து பார், தெரியும் உனக்கு. நாலாம் நாள் பைத்தியம் பிடித்து விடும்" என்று படபடத்தார். ராமு தன்னுடைய தாயைப் பேசாமல் இருக்கும்படி ஜாடை காட்டினான்.

"தாத்தா! தாத்தா! என் பல்லு விழுந்துடுத்து. தெரியுமோ?" என்று கேட்டுக் கொண்டே ஓடி வந்தாள் ஐந்து வயதுப் பேத்தி சசி. தாத்தாவின் முகம் மலர்ந்தது.

"தாத்தா, அதை உங்களுக்குக் காட்டட்டுமா? தோட்டத்திலே புதைச்சு வைச்சிருக்கேன். மானத்துக்குக் காட்டினா, சிங்கப் பல்லு முளைச்சிடுமாம். நிஜமாவே முளைக்குமா, தாத்தா?" என்று கேட்டவள் ஒரு நிமிட யோசனைக்குப் பிறகு, "ஓ! மறந்துட்டேனே, தாத்தா! என் பல்லே நீங்கள் பார்க்க முடியாதே! இப்ப உங்களுக்குத்தான் கண்ணு தெரியலையே" என்றாள். கிழவரின் முகம் வேதனையினால் சுருங்குவதைக் கண்ட ராமு, "ஏய், சசி! சும்மா தொந்தரவு பண்ணாதே, உன் தாத்தாவை! இங்கே வா!" என்று கூறி அவளை உள்ளே அழைத்துச் சென்றான்.

அடுத்த சில நிமிஷங்களுக்கெல்லாம் வாசலில் ரிக்ஷா வந்து நின்றது. அதிலிருந்து அவருடைய பெண் சரோஜா இறங்கினாள். காப்பியும் கையுமாக அங்கே வந்த விசாலம் கர்ப்பவதியான தன் பெண்ணை மகிழ்ச்சியுடன் வரவேற்றாள்.

"என்னா, குழந்தையைப் பார்த்தால் எப்படியிருக்கிறது தெரியுமா? நம்முடைய கண்ணே பட்டுவிடும் போலிருக்கிறதே!" எனக் கூறி அகமகிழ்ந்தாள் விசாலம்.

ஒரு பெருமூச்சுத்தான் அவரிடமிருந்து பதிலாக வெளிவந்தது. 'இந்தப் பாழாய்ப்போன கண்கள் தெரியா விட்டால்...' என்று மனம் பழகிய பாதையில் ஓடியது.

"சரி, சரி, முனியனைக் கூப்பிட்டு இந்த நாற்காலியைத் தோட்டத்தில் போடச் சொல். சற்று நேரமாவது காற்றாட உட்காருகிறேன்!" என்றார்.

விசாலமும்சரோஜாவும் உள்ளே திரும்பினர்.

கிழவர் தோட்டத்தில் தனியே உட்கார்ந்திருந்தார். மனம் பற்பல எண்ணக் கோடுகளை இழுத்த வண்ணமிருந்தது. 'பார்வையில்லா விட்டால் இந்த உலகத்திலே என்ன சுகம் இருக்கிறது? ஒளி...ஒளி....ஒளி வேண்டும்....



ஒளியில்லா விட்டால் வாழ்க்கையே இருள் மயம்தான்' என்று முணுமுணுத்தார்.

சூரியன் அஸ்தமித்து விட்டதால் சற்றே இருண்டிருந்தது. தெருவில் இப்பொழுது சந்தடி குறைந்திருந்தது. திடீரென்று அடுத்த வீட்டுத் தோட்டத்துக்குச் செல்லும் வழியை அடைப்பதற்காகப் போடப்பட்டிருந்த மூங்கிற்கதவு கிரீச்சிட்டது. "யாரது?" என்ற கேள்வி கிழவரின் கண்டத்திலிருந்துஎழுந்தது.

"நான்தான்...தாத்தா..." என்று தயக்கத்துடன் பதில் வந்தது. குரலிலிருந்து யாரோ ஒரு சிறு பையன் என ஊகித்துக் கொண்டவர் "நானென்றால் யார்? உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

"என் பெயர் மோகன் தாத்தா...நான் பக்கத்து வீட்டிலேதான் இருக்கிறேன்...நான் அங்கே உங்ககிட்டே வந்து பேசலாமா தாத்தா?" என்று கேட்டான் சிறுவன்.

"அதற்கென்ன? வாயேன் இங்கே!" என்று அழைத்த கிழவருக்கு, 'பக்கத்து வீட்டில் யாரோ புதிதாகக் குடி வந்திருக்கிறார்கள்' என்று சமீபத்தில் விசாலம் கூறியது நினைவு வந்தது. பையன் தட்டுத் தடுமாறிக் கொண்டே அவரருகில் புல்தரையில் உட்கார்ந்தவுடன், "ஏண்டா! நான் உனக்கு எப்ப தாத்தாவானேன்?" என்று புன்னகையுடன் வினவினார்.

"நீங்கள் தினம் தினம் இங்கே வந்திருப்பேயில்லையா? அம்மா சொல்லுவா...நீங்கள் தாத்தா மாதிரியே இருக்கிறீர்களாம்...வந்து எனக்குத் தாத்தாவே இல்லே...அதனாலே தான் உங்களைத் தாத்தான்னு கூப்பிட்டேன்... வந்து...தாத்தான்னு கூப்பிட்டால் உங்களுக்குக் கோபம் வருமா?" என்றான்.

கிழவர் வாய்விட்டுச் சிரித்தார். "கோபமா? ஊஹூம்! எனக்குக் கோபமே வராது!" என்று அவர் நாக்கு மொழிந்தபோது, அவருடைய மனம் அந்தப் பொய்யை ருசி பார்த்துச் சிரித்தது. "அது சரி. உனக்கு யார் மோகன் என்று பெயர் வைத்தார்கள்? நவீனப் பெயராக இருக்கிறதே?" என்றார்.

"நான் சின்னவனாக இருந்தப்போ, எப்பவும் சிரிப்பேனாம். அதனாலே எங்கம்மா என்னை மோகன் மோகன்னு கூப்பிட்டாள்."

"ஓ சின்னவனாக இருந்தாயாக்கும்? இப்பொழுது ரொம்பப் பெரியவனோ? ஏண்டா, உனக்கு இப்போது எவ்வளவு வயதாகிறது?"

"வந்து...எனக்கு இப்ப எட்டுவயசாம்..."

'எட்டு வயதுப் பாலகன் எங்கே, எழுபதை எட்டிப் பிடிக்கும் குடுகுடு கிழமான நான் எங்கே...மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம்தான்...ஹூம்! இவன் என்னைப் போல் வாடி வதங்கியவனில்லை. பிஞ்சு உள்ளம். அன்பான பெற்றோர். வசதியுள்ள வாழ்க்கை. இருந்தால்இப்படியல்லவா இருக்கவேண்டும்?'

கிழவரின் சிந்தனை, சிலந்திப் பூச்சியின் கால்களைப் போல் எட்டு திக்குகளிலும் கிளை விரித்தது. எங்கோ ஒரு பட்சி கூ கூவெனக் கூவவே அங்கு நிலவிய மௌனம் கலைந்தது.

"தாத்தா! அந்தப் பறவை எவ்வளவு ஜோராகப் பாடுகிறது. கேளுங்கள், தாத்தா! எதையோ காணாமல் போக்கி விட்டு அழுகிற மாதிரியில்லே? பாவம்!" என்றான் மோகன்.

'கவி போலல்லவா வர்ணிக்கிறான்!' என்று கிழவர் தமக்குள் கூறிக் கொண்டார்.

"தினம் எங்கம்மாவுடன் ரேடியோவிலே பாட்டுக் கேட்பேன். தாத்தா, உங்களுக்கும் பிடிக்குமோ? எனக்கு எல்லாப் பாட்டும் பிடிக்கும். கடைக்காரி தயிரோ தயிருன்னு கத்திக் கொண்டே தெருவிலே போவாளே, அதுவும் பிடிக்கும். அப்புறம், எங்கப்பாவோட சைக்கிள் மணி 'கிணிங் கிணிங்'னு அடிக்கிறது. குழாய் ஜலம் 'கலகல'ன்னு கொட்டுகிறது. எங்க வீட்டுத் தாயி துணியை 'படார் படார்'னு அடித்துத் தோய்க்கிறது. எல்லாம் ரொம்ப நன்றாயிருக்கும் தாத்தா! எங்கள் வீட்டுப் பூனை எப்படியிருக்கும் தெரியுமா தாத்தா? வழவழன்னு இருக்கும். அதன் குட்டியைத் தொடப் போனால் அது ஓரேயடியாகக் கத்தும்..."

கிழவர் கண்களை மூடியவாறே அவன் கூறிய காட்சிகளைக் கற்பனை செய்து களிப்படைந்தார். சற்றைக்கெல்லாம் தோட்டக் கதவினருகில், "மோகன்! மோகன்!" என்று யாரோ அழைத்தனர். "அதோ! எங்கம்மா என்னைக் கூப்பிடறா! நான் போகணும்!" என்ற மோகன் எழுந்திருந்தான். "இதோ வந்துட்டேனம்மா!" எனத் தாய்க்கு உரக்கப் பதில் கொடுத்தவன் கிழவரிடம், "தாத்தா...வந்து உங்க வீட்டிலே ரோஜாப்பூ நிறையப் பூக்கிறதாமே...அப்பா சொல்லுவா... ரொம்ப அழகாயிருக்குமாம்..வந்து...தாத்தா எனக்கு ஒரே ஒரு பூப்பறிச்சுத் தருவேளா? எங்கம்மாவுக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றான்.

"ஒரு பூவென்ன? வேண்டிய மட்டும் பறித்துக் கொண்டு போ!" என்றார் அவர்.

மோகன் தயங்கினான். "தாத்தா என்னாலே முடியாதே தாத்தா...வந்து...வந்து..."

"நீ என்ன சொல்லுகிறாய், மோகன்? அதோ எதிரே வேலியோரமாகத்தானே ரோஜாச் செடியின் பாத்தி யிருக்கிறது? உனக்கு எவ்வளவு பூவேண்டுமோ, அவ்வளவு பறித்துக் கொண்டு போ" என்றார் கிழவர்.

"உங்களுக்குத் தெரியாதா, தாத்தா? எனக்கு இரண்டு கண்ணும் தெரியாது...... அதனாலேதான் என்னாலே பறிக்க முடியாது. ரோஜாச்செடி முள் குத்துமாம். அம்மா சொல்லுவா. எனக்குப் பயமாயிருக்கு."

கிழவர் தேள் கொட்டியதுபோல் துடித்தார். "மோகன்! நிஜமாக உனக்குக் கண்ணே தெரியாதா?"

"ஆமாம், தாத்தா! பிறந்தபோதே எனக்குக் கண்ணில்லையாம். அப்பாவும் அம்மாவும் சொல்றா. அதனாலென்ன? எங்கப்பாவும் அம்மாவும் எனக்கு எல்லாம் பார்த்துச் சொல்லுவா" என்றான் மோகன்.

"மோகன்! நீ குணவானடா!" எனக் கூவியவாறு அந்தப் பிஞ்சு முகத்தைத் தம் முகத்தோடு இணைத்துக் கொண்டார் அவர். உணர்ச்சி மிகுதியால் அவருடைய உதடுகள் துடித்தன. மோகன் தன் கைகளால் அவர் கன்னங்களை வருடியவுடன் திடுக்கிட்டான்.

"என்ன தாத்தா, உங்கள் கன்னம் ஈரமாயிருக்கு? நீங்கள் அழுகிறீர்களா தாத்தா?"

மோகனின் கேள்விகளுக்குப் பதிலொன்றும் கிடைக்கவில்லை. கிழவருடைய அகத்தின் ஒளி—இதுகாறும் அடைபட்டிருந்த ஜீவ ஒளி—இன்று வெள்ளப் பெருக்காக அவர் கண்களிலிருந்து வழிந்தோடிக் கொண்டிருந்தது.

# இனாம்!

(சரக்கு இருக்கும் வரை)

ஒரு பாட்டில்

## பிரில்க்ரீம்

சிறந்த சிகை அலங்கார சாதனம்

ஒவ்வொரு பெரிய சைஸ்

## மக்ளீன்ஸ்

பற்பசை

வெண்மை அல்லது குளோரோபில் சேர்ந்ததோ, வாங்கும்பொழுது கிடைக்கும்.




பெரிய சைஸ் மக்ளீன்ஸ பற்பசையின் வழக்கமான விலைக்குக் கிடைக்கும் இந்த பிரத்தியேகமான பெட்டியை வாங்குங்கள்.

ஆந்திரா, கேரளா, மதறாஸ் மற்றும் மைசூர் முதலிய இடங்களில் கிடைக்கின்றன.

HTA/P/2/61-TAM




## விசை வாத்து

உலகில் எத்தனையோ விசித்திரப் பிரகிருதிகள். அவர்களில் அத்தானும் ஒருவர். அவருக்கு ஊர் உலகம் எல்லாம் விசை வாத்திலேயே அடங்கியிருந்தது. அவர் மனைவி கார் விபத்தில் மாட்டிக் கொண்டு விட்டாள் என்று அறிந்ததும் அவர் கவலைப்பட்டது எதற்காகத் தெரியுமா? விசை வாத்துக்குத்தான். அவர் மனைவியின் கைக்கு வைத்தியம் செய்திருக்க முடியும். ஆனால் விசைவாத்து உடைந்து போனது போனதுதானே? இப்படியும் ஒரு விசித்திரப் பேர்வழி உண்டா என்று நகைக்கிறீர்களா? 'விசை வாத்து' என்னும் கதையைப் படித்தால் அந்த அதிசய பாத்திரத்தின் விசித்திர வியாக்யானங்கள் உங்களை நகைப்புக் கடலில் ஆழ்த்தும். தி. ஜ. ர. அவர்கள் தமக்கே உரிய ஹாஸ்ய நடையில் இந்தக் கதையைச் சித்திரித்திருக்கிறார். 'அருள்' பத்திரிகைக்காரரும் 'இருள்' பத்திரிகைக்காரரும் முட்டி மோதிக்கொண்டு வழக்காடும் கதை அவரது ஹாஸ்யத்தின் சிறப்புக்கு மற்றோர் எடுத்துக்காட்டு. எந்தச் சின்னஞ் சிறு நிகழ்ச்சியும் தி. ஜ. ர. வின் பேனாவின் முனையிலே அற்புதமான ஒரு சிறு கதையாக உருவாகி விடுகிறது. சின்னஞ் சிறு வயதில் சோனி சௌரியை ஞானவி ஒரு குட்டுக் குட்டினாள். அந்தச் சிறிய நிகழ்ச்சிக்குப் பிறகு அவன் மனத்தில் நிகழ்ந்த போராட்டங்களை, பயங்கரக் கறைகளை விவரிக்க வொண்ணாது. ஆனால் அந்தச் சிறிய நிகழ்ச்சியே சௌரியின் வாழ்க்கைக்கு வழி காட்டியாக அல்லவா அமைந்துவிட்டது? எந்தக் கதையைத் தொட்டாலும் அந்தக் கதையிலே அருமையான நகாசு வேலையைக் காண்கிறோம்.

பிரசுரம்: ஜெமினி பிரசுரம், எல்லையம்மன் காலனி, சென்னை—6. விலை: ரூ. 2.

## அமெரிக்க ஐக்கிய நாட்டுச் சரித்திரம்

யாரும் நம்ப முடியாதவாறு மிகவும் பிற்போக்கான நிலையில் இருந்த அமெரிக்கா, படிப்படியாக முன்னேற்றம் அடைந்து இன்று அமெரிக்க ஐக்கிய நாடுகள் என உலகப் புகழ் பெற்றுள்ளது. பொருளாதார சுபிட்சத்திலும், ஆயுத வலிமையிலும், யந்திர வளர்ச்சியிலும், நவீன நாகரிகப் பண்பிலும் இன்று அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு ஈடு இணையே இல்லை. உலகில் நிதி பலமற்ற நாடுகளும், ஆயுத பலமில்லாத நாடுகளும் அமெரிக்க உதவியையே நாடுகின்றன. 1607-ம் ஆண்டிலிருந்து ஆரம்பமாகும் இந்தச் சரித்திரத்தில், முந்நூற்றைம்பது ஆண்டுகள் நிகழ்ந்த அற்புத சம்பவங்களும், அரசியல் சண்டமாருதங்களும் அமெரிக்காவை உருவாக்கிய ஆபிரகாம் லிங்கன் போன்ற உலகப் புகழ் பெற்ற உத்தமத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளும் அடங்கியிருக்கின்றன.

பிரபல ஆசிரியர்களான ஆலன் நெவின்ஸ், ஹென்றி ஸ்டீல் கம்மாகர் எழுதிய இந்த நூலை, ஸ்ரீ எம். எஸ். கல்யாண சுந்தரம் பி.ஏ., அவர்கள் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். ஆங்கிலத்தில் உள்ள 'எப்' என்ற எழுத்தின் உச்சரிப்புக்குப் பங்கம் வராமல் இருப்பதற்காக, ஜெஃபெர்ஸன், ஃபெடரல், ஃபிலடெல்ஃபியா, பஸிஃபிக் போன்ற ஏராளமான சொற்களை மேலே குறிப்பிட்டவிதம் அக்கறையுடன் எழுதியுள்ள மொழிபெயர்ப்பாசிரியர், டாரிப், டிமோக்ராட், ரிபப்ளிகன், மில்லியன், ஸ்டேட், ஸ்டோர், டெரிடெரிபோன்ற மற்றும் பல ஆங்கில வார்த்தைகளைப் பக்கம் பக்கமாக அள்ளி வீசாமல் இருந்திருந்தால், மொழிபெயர்ப்பின் சிறப்புக் குன்றாதிருந்திருக்கும். இவையும் பல சில்லறைப் பிழைகளும் இரண்டாவது பதிப்பில் தவிர்க்கப்படுமென நம்பலாம். மலிவான இந்நூலை அனைவரும் வாசித்துப் பயன்பெறலாம். —வாஞ்சி

கிடைக்குமிடம்: இந்தியா புக்ஹவுஸ், 193, மவுண்ட்ரோட், சென்னை—2. விலை: ரூ. 1.

## உனக்காக

"விழிமொழியால் அழைக்கின்றாய்;
அருகுவந்தால்
விரட்டியெனை ஓட்டுகின்றாய்
முகச்சுழிப்பால்."

கவிதைச் சுரங்கமாகத் திகழ்ந்த நம் தமிழ் இலக்கியத்திலே பாரதி யுகத்துக்குப் பின் கதிரவனுக்கெதிரே தாரகைகளென ஒளி மங்கிவிட்டது கவிதையின் நிலை.

ஆயினும் வழி வழி வந்த கவிஞர்கள் வாளா விருந்தார்களில்லை. கற்பனை சுரக்கும் நேரத்திலே நிந்தமிழிலே கவிதையை வடித்துக் கொடுக்கவே முயன்றிருக்கிறார்கள். இந்த நாள்வரை ஏக்கம் கொண்டிருந்த கவிதைக் கலை மீண்டும் 'கல கல' வெனச் சலசலத்து ஓடும் என்பதற்கான அறிகுறி தோன்றுகிறது.

இளங் கவிஞர்களிலே இளம்பாரதி கருத்துச் செறிந்த கவிதை புனைவதிலே வெற்றி காண முயன்றுவருகிறார் என்பதற்கு அடையாளமாக 'உனக்காக' என்னும் இந்தக் கவிதைத் தொகுதி அமைந்திருக்கிறது. உள்ளத்தில் உதிக்கும் கருத்துக்கு ஓர் உருவம் கொடுக்க முயன்றிருக்கிறார். அதில் வெற்றியும் கண்டிருக்கிறார் என்பதற்கு ஆரம்பத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் இரு வரிகளே சான்று.

கிடைக்குமிடம்: மீனாட்சி புத்தக நிலையம்; மதுரை—1. விலை: ரூ. 1—50.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

## வாடாத இளமையழகு
## வாராதோ
## விரலசைந்தால்!

அன்ருடம் ஹிமாலயா புக்கே ஸ்நோ பூசிக்கொள்ளுங்கள்: உங்கள் சருமம் மென்மையுடனும், புது மலர்ச்சியோடும் மாருத இளமையோடும் சோபிக்கும்!
முகப்பருக்களும், சுருக்கங்களும், வரட்சியும் ஏற்படாமல் பாதுகாக்கிறது ஹிமாலயா புக்கே ஸ்நோ. மாருத இளமைப் பொலிவுக்கு உபயோகியுங்கள் ஹிமாலயா புக்கே ஸ்நோ.

*எடுப்பான புது ஜாடி*
*மிடுக்கான புது அட்டைப்பெட்டி*




# ஹிமாலயா
# புக்கே
# ஸ்நோ



HBS.21-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon